

# மும்மதம்



சென்னை ஆரிய சமாஜம் (தமிழ்நாடு)
வெளியீடு

ஓம்

# மும்மதம்

(சாந்தாப்பூர் பட்டி மன்றம்)

**ஆரிய சமாஜ நிறுவனர்**
**மகரிஷி தயானந்த சரஸ்வதி அவர்கள்,**
**மௌல்வி முகம்மது காசிம் அவர்களுடனும்**
**ரெவரெண்ட் ஸ்காட் பாதிரியார் அவர்களுடனும்**
**பொதுமேடையில் நடத்திய விவாதம்.**

*மறைந்த* **R.B. ரத்தன் லால்** *அவர்களின்*
*ஆங்கில மொழி பெயர்ப்பினின்றும்*
*தமிழாக்கம்:*
**K. வேலாயுத ஆர்ய**


*வெளியிட்டோர்:*
**சென்னை ஆரிய சமாஜம்**
**(தமிழ்நாடு தலைமை நிலையம்)**
*183, அவ்வை சண்முகம் சாலை, (லாயிட்ஸ் ரோட்)*
*சென்னை - 600 086.*

ஓம்

# நன்றி அறிவிப்பு

இன்றய உத்திரப் பிரதேசத்தைச் சேர்ந்த சாந்தாபூரில் கிறித்தவ, இசுலாமிய சமயத்தலைவர்களுடன் ஆரிய சமாஜ நிறுவனர் மகரிஷி தயானந்த சரஸ்வதி அவர்கள் நடத்திய விவாதம் மெய்நெறிவிளக்கம் அல்லது சாந்தாபூர்பட்டிமன்றம் என்றபெயரில் வரலாற்றுப்புகழ் பெற்ற நிகழ்ச்சி. அதன் முழு விவரத்தை, ஆஜ்மீர் பரோபகாரிணி அவை ஒரு சிறு நூலாக "Chandapur Fair" என ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ளது. இவ்வவையாரின் ஒப்புதலுடன் இந்நூல் முதன் முறையாகத் தமிழில் வெளிவருகிறது. அவையாருக்கு சென்னை ஆரிய சமாஜத்தின் நன்றி உரியதாகும்.

சிவராத்திரி-ரிஷி
போத திவஸ்
26-2-1987

**த. பாண்டுரங்க ராவ்**
செயலாளர்
ஆரியசமாஜம்
(தமிழ்நாடு தலைமை நிலையம்)
சென்னை-600 086.

# பதிப்புரை

நமது நாடு தன்னுரிமையடைந்து, தன்னாட்சியமைந்த பின்பு, அங்கிங்கெனாதபடி நாட்டின் பல பகுதிகளிலும், நாளுக்கு நாள் மதக்கலவரங்கள் நிகழ்ந்து வருவதைக் காணுகின்றோம். இதனால் மக்கள் அமைதியற்ற வாழ்க்கை நடத்தி வருவது கண்கூடு. இதற்காகவா நமது முன்னோர் இன்னுயிராம் தன்னுயிர் தந்து இந்நாட்டை அந்நிய ஆதிக்கத் தினின்றும் மீட்டனர்? எங்கே போராட்டங்களும், கலவரங்களும் இல்லையோ, எங்கே அமைதியும், நாட்டுப்பற்றும், நேர்மையும் ஆட்சி செலுத்துகின்றனவோ, அங்குதான் முன்னேற்றமும், வளமும் சிறக்க முடியும்.

மதக் கலவரங்கள் ஏன் உண்டாகின்றன என்று சற்று ஆழ்ந்து சிந்தித்தோமானால், நமக்குக் கிடைக்கும் விடை, தாம் பின்பற்றுகின்ற மதத்தைப் பற்றிச் சரியாகப் புரிந்து கொள்ளாமையும், மதத்தின் பால் கண்மூடித்தனமாக வெறித்தன்மையை வளர்த்துக் கொண்டிருப்பதுவுமே ஆகும். இந்த நிலை மாறினல், பெரும்பாலும் மதக்கலவரங்களே உண்டாக வாய்ப்பில்லை. என்பதை நாட்டு விடுதலைக்கு முன்பே உணர்ந்த மாமுனிவர் தயானந்த சரசுவதி அவர்கள், பெரும்பாலோர் பின்பற்றி வருகின்ற கிறித்தவ, இசுலாமிய மதங்களைக் குறித்தும், 'சனாதன தர்மம்' என்றழைக் கப்படுகின்ற நமது வேத நெறிகளைக் குறித்தும், மக்களுக்குச் சரியான தெளிவான விளக்கம் அளிப்பதற்காக ஒரு பட்டி மன்றம் ஏற்பாடு செய்தார்.

சாந்தாபூர் என்ற ஊரில் நிகழ்ந்த இந்தப் பட்டி மன்றத்தில், கிறித்தவ, இசுலாமிய மதங்களின் கொள்கைகள், கோட்பாடுகள் ஆகியவற்றை நன்கறிந்தோர் என அந்நாளில் கருதப்பட்ட பாதிரியரும், மௌல்வியரும், வேத நெறிகளைத் தெளிவாக விளக்கவல்ல தயானந்தரும் பங்கு பெற்றனர். மூன்று நாட்கள் நடைபெற்ற இந்தப் பட்டிமன்ற நிகழ்ச்சிகள், பார்வையாளராகப் பங்குபெற்ற அனைவரின் செவிக்கு விருந்தாக அமைந்ததுடன், சிந்தனையைத் தூண்டுவதாகவும் அமைந்திருந்தன.

இந்தப் பட்டிமன்றத்தில் அளிக்கப்பட்ட விளக்கங்கள், அன்று மட்டுமல்ல, என்றும், எல்லா மக்களுக்கும் பொருந்து வனவாகவும் அமைந்திருப்பதுடன் ஆக்கம்மிக்க சிந்தனைகளைத் தரவல்லனவுமாகும். இவ்விளக்கங்களைத் தமிழ் கூறும் நல்லுலகமும் ஏற்றுப் பயனடைய வேண்டும் என்ற எண்ணத்துடன் இத்தொகுப்பு ஏடு வெளியிடப் படுகின்றது.

இந்தத் தொகுப்பு ஏடு, படிப்போரின் சிந்தனையைத்தூண்டி, மத மற்றும் நெறி நல்லுணர்வுகளைத் தோற்றுவித்து, பொறுமையை வளர்ந்து, ஆன்மீகச் சிந்தனைகளைச் சிறக்கச்செய்து, வாழ்வில் எங்கும் அமைதி நிலவ உதவ வேண்டும். இதனைப் படிப்போர் சமன் செய்து சீர் தூக்கும் கோல்போல் அமைந்து, காய்தல் உவத்தல் அகற்றிப் பொய் நெறிகளைப்புறக்கணித்து, செந்நெறியாம் மெய்ந்நெறி உணர்ந்து போற்றுக!

அன்பன்

**பாண்டுரங்கன்,**
இணைச் செயலர்
பதிப்புகள் பொறுப்பாளர்
ஆரிய சமாஜம் (சென்னை)

*14-4-'95*
சென்னை

ஓம்

# மும்மதம்

## (சாந்தாப்பூர் பட்டி மன்றம்)

சாந்தாபூர், உத்திரப்பிரதேச மாநிலம், ஷாஜகான்பூர் மாவட்டத்தில் உள்ளது. அவ்வூரைச் சார்ந்த முன்ஷி பியாரேலால் எனும் நிலக்கிழார், உண்மையான சமயத்தைப்பற்றி மக்கள் சரியாகத் தெரிந்துக்கொள்ள வேண்டுமென விரும்பி, மாவட்ட கலெக்டரின் ஒப்புதலுடன், ஒரு சமய விழா எடுக்க முடிவு செய்து, பல சமயத்தவர்களையும் பங்கு கொள்ள அழைத்தார். அந்நாளில் புகழ் பெற்ற கிறித்தவ, இசுலாமிய, இந்து சமய அறிஞர்கள் அதனில் பங்கு கொள்ள முன்வந்தனர். சமய விழாவின் முதல் கூட்டம், 19 மார்ச் 1877 அன்று நடைபெறும் என அச்சிட்ட அறிவிப்புகள் பொது மக்களிடையே பரவலாக வெளியிடப்பட்டன. நட்புறவுடன் வாத விளக்கங்கள் செய்து, அறிஞர்கள் சமயங்களின் உண்மையை வெளியிட வேண்டுமென்பதே விழாவின் நோக்கம். மேற்கூறிய சமயக் கோட்பாடுகளை எல்லா மக்களும் அறிந்து கொள்ள வேண்டுமென்பதற்காகவே இந்நூல் வெளியிடப்படுகிறது. எல்லாச் சமயங்களையும் சார்ந்த மக்கள் இச்சமய விவாதங்களை விருப்பு வெறுப்பின்றி படித்து உண்மையைத் தெளிந்து தேறல் சிறந்ததாகும்.

(அறிவிப்பு வெளியான பின்னர், சமய விழாவில் பங்கேற்க பல அறிஞர்கள் வந்தனர். முதலாவதாக வந்தவர், புகழ் பெற்ற வேத வித்தகரும், ஆரிய சமாஜ நிறுவனருமான சுவாமி தயானந்த சரஸ்வதி அவர்கள். அவருடன் வந்தவர் முன்ஷி இந்திர மணி எனும் அறிஞர். முன்ஷி அவர்கள் தீவிர இசுலாமிய மத எதிர்ப்பாளர். மொரதாபாத் (உபி) நகரைச் சேர்ந்தவர். பாரசீகம், அராபிய மொழிகளில் மெத்தப் புலமை வாய்ந்தவர் என்பதுடன், குரான்-ஹதீஸ் நூல்களையும் நன்கு மதிப்பீடு செய்யக் கூடிய அளவுக்குக் கற்றவர். சமயக்கருத்துகளில் ஈடுபாடு கொண்ட இவ்விரு பெரியோர்களும், சாந்தாபூருக்கு 1877 மார்ச் 15-ம் நாளன்று வந்து சேர்ந்தனர். பட்டிமன்ற

நாளான 19-ஆம் தேதியன்று புகழ் பெற்ற கிறித்தவச் சமய அறிஞரான ரெவரெண்ட் டி.ஜிஸ்காட் அவர்கள், ரெவ. நோபல், ரெவ. பார்க்கர், ரெவ. ஜான் தாம்சன் எனும் பாதிரியார்களுடனும், பரேலி, கான்பூர், மொரதாபாத், ஷாஜகான்பூர் நகர்களைச் சேர்ந்த வேறு பல கிறித்தவ அறிஞர்களுடனும் வந்து சேர்ந்தார். ஸ்காட் அவர்கள் பெரிய அறிஞர்; வாதத் திறமை வாய்ந்தவர்; பைபிள் பற்றிய விளக்க நூலும், பல சிறுநூல்களும் வெளியிட்டவர். முகம்மதியர்களின் சார்பாக, அதே நாளில், அதே நேரத்தில் தேவபந்த் (இசுலாமிய சமய) கல்லூரி முதல்வரும், வாதவிளக்கம் பற்றி மிகச் சுவையான நூல் ஒன்று எழுதியவருமான மௌல்வி முகம்மது காஸிம் அவர்களும் வந்து சேர்ந்தார். இப்பெரியார் தலைமை வகித்த நிறுவனம், இந்தியாவிலேயே மிகச் சிறந்த புகழ்பெற்ற அராபிய மடம் ஆகும். மௌல்விகளுக்கு சான்றிதழ்கள் வழங்கியர் இவர். இவருடன் வந்தவர்களுள் குறிப்பிடத்தக்கவர் டில்லியைச் சேர்ந்த ஸையத் அப்துல் மன்ஸூர் அவர்கள். இவர் கிறித்தவத்தை எதிர்த்து "ஜிந்தா ஜவேத்" எனும் நூல் இயற்றியவர்; இலக்கியப் பட்டிமன்றங்களில் முதன்மையாக நின்றவர்; தம்முடைய புலமைக்காக துருக்கி சுல்தானிடமிருந்து பாராட்டுப் பத்திரம் பெற்றவர். - மூல மொழி பெயர்ப்பாளர்.)

இந்த சமய விழா இரண்டு நாள் நடைபெற்றது. விழா துவங்குவதற்கு முன், பலர் சுவாமி தயானந்தரை அணுகி ஆரியர்களும் (இந்துக்களும்), முசுலீம்களும் கூட்டணி அமைத்து கிறித்தவர்களை மதிப்பீடு செய்வது சிறப்பாக இருக்குமென்று கருத்து தெரிவித்தனர். ஆனால் சுவாமி தயானந்தர், அதற்கு இணங்கவில்லை. எந்த சமயம் உண்மையானது, எது பொய் என்பதை அறிந்து கொள்ளவே சமய விழா நடக்கிறது என்றும், எவரேனும் ஒரு குழுவினரை பகை உணர்வுடன் தாக்குவது மிகவும் தவறு என்றும், விருப்பு வெறுப்பின்றி எல்லோரும் அன்புடன் உண்மையை அறிந்து கொள்ள முன் வருவதே நன்மை பயக்கும், நேர்மையானதும், சரியானதும் ஆகும் என்று அவர் கூறிவிட்டார்.

பின்னர் விழாவின் நேர அளவு பற்றி விவாதம் நடைபெற்றது. அறிவிப்புகளில் இரண்டு நாள் என்று

வேண்டும் என்றார். அதற்கு சுவாமிகள் "ஷியாக்களும், சுன்னிகளும் ஒரு மனதாக உங்களைத் தேர்ந்தெடுக்காத பொழுது, ரோமன் கத்தோலிக்கர்களும் இங்குள்ள கிறித்தவர்களைத் தமது சார்பாளராக ஏற்றுக்கொள்ளாத பொழுது எங்களைப்பற்றி ஏன் எதிர்ப்பு தெரிவிக்கின்றீர்கள்? எங்களை சார்பாளர்களாக ஏற்கப் பலர் இருக்கலாம், அப்படி ஏற்க விரும்பாதவர்களும் எங்களில் பலர் இருக்களாம். ஆனால் அதற்காக எங்களிடையே கருத்துவேறுபாட்டை உண்டாக்க உங்களுக்கு உரிமையில்லை" என்றார். முன்ஷி இந்திர மணியும் "வேதங்களையும், சாத்திரங்களையும் நம்புகிறவர்கள் நாங்கள்; இவர்களும் அப்படித்தான்; அப்படி நம்பிக்கையில்லாத இந்துக்கள் இங்கிருந்தால், அவர்களை விவாதத்தில் நான்காவது கட்சியாகச் சேர்ந்துகொள்ளலாம்," என்று கூறினார். எதிர்ப்புக்களை மௌல்விகள் கொண்டு வந்ததன் நோக்கம், ஆரியருக்கும், இந்துக்களுக்குமிடையே சச்சரவுண்டாக்கி அதனால் ஏற்படுகிற சண்டையை வேடிக்கை பார்க்கலாம் என்பதாம். பண்டித லட்சுமணரை ஒரு சார்பாளராக தம்முடைய குழுவில் ஏற்பது சரியானதென்று ஆரியர்களும் கருதவில்லை. இதற்கிடையில் மௌல்விகளும் புரிந்துகொண்டு, தொழுகைக்கு நேரமாகிறது என்று சென்று விட்டனர். தொழுகையிலிருந்து திரும்பியபின் மௌல்வி முகம்மதுபின் காசிம், ஒரு மணி நேரம், தாம் தம்முடைய சமயம் பற்றிப் பேசுவதாகவும், விவாதத்திற்கு எடுக்கப்பட்டுள்ள பொருட்கள் பற்றித் தம்முடைய கருத்துக்களைப் பின்னர் கூறுவதாகவும், தம் பேச்சால் எழக்கூடிய ஐயங்களை தீர்த்து வைப்பதாகவும் சொன்னார். இதனை எல்லோரும் ஏற்றுக்கொன்டனர்.

## முதல் நாள் விவாதம்

மௌல்வி முகம்மது காசிம் சொல்கிறார்: (கடவுள் வாழ்த்து முடிந்தபின்) "அந்த அந்தக் காலத்தில் அரசராக இருப்பவரை எல்லோரும் பணிந்து நடக்க வேண்டும். இப்பொழுது அரசராக இருக்கிறவரைப் பணிந்து சேவை செய்து எல்லோரும் நடந்துக் கொள்வதை நாம் பார்க்கிறோம். இதற்கு முன்பு அரசராக இருந்தவரை அல்ல; அவருடைய பதவிக்காலம் முடிந்துவிட்டது. மேலும் முடிந்து தீர்ந்துவிட்ட சட்டப்படி யாரும் நடப்பது

இல்லை. ஆனால் நடைமுறையில் உள்ள சட்டம் எல்லோராலும் ஏற்கப்படுகிறது. அதேபோல முந்தைய பிறவிகளையும், தேவதூதர்களையும் அல்லது அவர்களுடைய நூல்களான பழைய, புதிய ஏற்பாடுகள், துதிப்பாடல்கள் போன்றவற்றையும் நாம் பின்பற்ற வேண்டியதில்லை. முகம்மது அவர்களே கடைசித் தூதர். எனவே அவரையே தூதராகவும், அவர் மூலமாக இறங்கிய குரானை கடவுள் வாக்காகவும் கொண்டு பணிந்து நடக்க வேண்டும். நாம் ஸ்ரீ ராமரையோ, ஸ்ரீ கிருஷ்ணரையோ, ஏசுவையோ குறைசொல்லவில்லை. அவரவர்கள் காலத்திற்கு மட்டுமே அவர்கள் தூதர்களாக இருந்தார்கள். ஆனால் நாம் உறுதியாக சொல்கிறோம். இப்பொழுது முகம்மது அவர்கள் மட்டும்தான் ஆளுகின்றார். முகம்மது அவர்களையும், எங்கள் சமயத்தையும், குரானையும் இழிவு செய்கிறவர்கள் கொல்லப் பட்டத்தக்கவர்கள்" ('வாஜிபுல்கதல்' - முதல் இந்தி நூலில் உள்ள சொல்லின் மொழிபெயர்ப்பு - மொழி பெயர்ப்பாளர்).

ரெவ. நோபல் பாரதியார் மௌல்வியின் பேச்சை திறனாய்வு செய்து பின்வருமாறு உரைத்தார்:- முகம்மது அவர்கள் இறைதூதர் என்பதும், குரான் இறைவன் வாக்கு என்பதுவுமே மிகவும் விவாதத்திற்குரிய பொருள்களாக உள்ளன. குரானே, பைபிளிலிருந்து இரவலாகப் பெறப்பட்டதாகும். எனவே, அது ஒரு தனி மறைநூலாக இருக்க முடியாது. ஏசு கிறித்து, இறையாற்றல் நிறைந்த பிறவி என்பது விவாதத்திற் கிடமில்லாத ஒரு உண்மை ஆகும். தம்முடைய பேச்சாற்றலி னால் அவர் மக்களை வழிநடத்திச் சென்றார் என்பது அவருடைய போதனைகளிலிருந்தே தெளிவாகிற பொருளாகும். அவர் அற்புதங்களும் செய்தார்.

மௌல்வி முகம்மது காசிம் பதில்:- கிறித்து இறைதூதர் என்பதையும், பைபிள் இறைவனால் தரப்பட்ட மறை நூல் என்பதையும் நாங்கள் நம்புகிறோம். ஆனால் கிறித்தவர்கள் அதனில் அனேக இடைச் செருகல்களைப் புகுத்தி யிருக்கிறார்கள். அதனால், அது இப்பொழுது உண்மை நூல் அல்ல. குரான் அதனைக் கண்டித்து, அதன் இடத்தைப் பெற்றுள்ளது. எனவே, பைபிள் இனிமேலும் நம்புவதற் குரியதல்ல. எங்கள் தூதர் முகம்மதுவே கடைசியில் வந்தவர். அதனால் எங்கள் சமயமே உண்மையானது.

பின்னர் பிற மௌல்விகள் அந்தப் பாதிரியாருக்கு பைபிளிலிருந்து ஒரு கூற்றை (reference) எடுத்துக் காட்டி, கிறித்தவர்களே அந்தக் கூற்று அதிகாரப்பூர்வமானது அல்ல என்று ஒப்புக்கொண்டுள்ளதையும் சொன்னார்கள்.

ரெவ. நோபல்: இப்படிச் சொன்னவர் உண்மையாக நடந்து கொண்டிருக்கிறார்; ஒரு தவறைத் திருத்தியிருக்கிறார் என்பதற்காக அவரைக் குற்றம் சொல்ல முடியாது. நாங்கள் உண்மையை நாடுகிறோம். எனவே எங்கள் சமயம் உண்மையானதே.

மௌல்வி முகம்மது காசிம்:- ஆமாம், அவர் அவ்வாறு செய்தது நல்லதுதான். ஆனால், ஒரு புத்தகம் அல்லது ஏட்டில் ஒரு தவறு கண்டுபிடிக்கப்பட்டால், அது ஆதாரம் மிக்கது ஆகாது. அப்படிப்பட்ட ஏடு நீதிமன்றத்தில் சரியானதாக ஏற்கப் படவும் மாட்டாது.

ரெவ. நோபல்: குரானில் அத்தகைய தவறு இல்லையா என்ன? இதைப்பற்றிப் பிடிவாதம்செய்து பெரிது படுத்துவது சரியல்ல. நாம் உண்மையை மட்டும் நம்புகிறோம். அந்த மேன்மையை அடையவே பாடுபடுகிறோம். அதனால் ஙபைபிளில் ஏற்பட்ட சொல் பிழையை ஒப்புக்கொண்டோம். நீங்கள் எத்துணையோ பெரிதுபடுத்திப் பேசிய உங்கள் குரானிலும் அத்தகைய இடைச்செருகல்கள் முதலியன நிரம்ப உண்டு.

இந்த பொருள் குறித்துக் கிறித்தவராக மாறிய ஒரு மௌல்வி, குரானின் அரபி மொழி கூற்றுகள் பலவற்றை, தூதர் முகம்மதுவின் காலத்திற்குப் பின்னர் குரானில் பல மாறுதல்கள் செய்யப்பட்டன என்பதை, எடுத்துக்காட்டுவதற்காக வாசித்துக் காட்டினார்.

மௌல்வி முகம்மது காசிம்: நல்லது, நீங்கள் மெய்யையே நாடிச் செல்பவர்கள்தானே? நீங்கள் மெய்யையே நம்புகிறவர் என்றால், ஏன் மூன்று கடவுள்கள் மீது நம்பிக்கை கொண்டிருக்கிறீர்கள்?

ரெவ. நோப[illegible] நாங்கள் மூன்று கடவுள்களை ஏற்கவில்லை. அந்த [illegible]வரும் ஒருவரே; ஒரே கடவுளே. அவருடைய செயலில் [illegible]தத் தன்மையும் உண்டு. கடவுட்

தன்மையும் உண்டு. மனித குணம் இருந்ததால் அவர் மனிதனுக்கு இயல்பானதைச் செய்தார். கடவுள் தன்மை இருந்ததால் கடவுளால் மட்டுமே முடியும் என்பதைச் செய்தார். அதாவது அற்புதங்களை நிகழ்த்தினார்.

மௌல்வி முகம்மது காசிம்: ஓ! ஒரே உறையில் இரண்டு வாட்கள் எப்படி இருக்க முடியும்? பாதிரியார் அவர்கள் சொன்னது முழுப்பொய். தாம் கடவுள் என்று ஏசு எங்குமே சொல்லவில்லை. பகுத்தறிவுக்கு ஒவ்வாத பிடிவாதம் உங்களைக் குருடாக்கிவிட நீங்கள் அவரைக் கடவுள் நிலைக்கு உயர்த்தி யிருக்கிறீர்கள்.

இதற்கு விடையாக ரெவரண்ட் நோபல் அவர்கள் பைபிளில் இருந்து ஒரு பகுதியைப் படித்துக் காட்டினார். அதனில் ஏசு தம்மைக் கடவுளாக அறிவித்துக் கொண்டதைப் பற்றி கூறி, அவர் பலவித அற்புதங்களை நிகழ்த்தினார் என்றும் எழுதியிருந்தது. அவர் கடவுளேதான் என்ற உண்மையைப் பற்றி எவ்விதமான ஐயத்திற்கும் இடமில்லாதபடி அந்தப் பகுதி அமைந்திருந்தது.

மௌல்வி முகம்மது காசிம்: ஏசு கடவுள் என்றால், ஏன் சிலுவையில் அறையப் படுவதினின்றும் தம்மை அவர் காத்துக் கொள்ளவில்லை?

அப்பொழுது ஒரு இந்தியப் பாதிரியார் குறுக்கிட்டு, குரானில் பல்வேறு பொருந்தாப் பொருட்களை குறிப்பிட்டுச் சொன்னார்: ஒரு கட்டளையை வேண்டுமானால் நீக்கி விடலாம்; ஒரு செய்தியையோ அல்லது வரும்பொருள் உரைத்தலையோ அல்ல. குரானில் வருகிற வரும்பொருளுரைத்தல், செய்திகளையும், வரும்பொருள் உரைத்தலையும் அழித்துவிடுகிறது. முசுலீம்கள் முதலில் ஜெரு சலேம் நகரில் உள்ள பைதுல் முகத்தஸ் எனும் தேவாலயத்தின் திசையில் சிரம் தாழ்த்தி வணங்கினார்கள்; ஆனால், பிறகு மக்கா அல்லது காபாவின் திசைக்குத் தலைவணங்கினர். பின்னர் அவர் பல பகுதிகளை விளக்கிவிட்டு "கிறித்துவை நம்பினாலன்றி வீட்டுப்பேற்றை அடைவது இயலாது" என்று உறுதியாகச் சொன்னார். முசுலீம்களை நோக்கி மேலும் அவர் கூறினார்: உங்களுடைய குரான், பைபிள் மீதும், ஏசுவின் மீதும் நம்பிக்கை

வைக்குமாறு வலியுறுத்துகிறது; அந்தக் கட்டளைப்படி நீங்கள் ஏன் நடக்கக்கூடாது?

விவாதம் நடக்கும்பொழுது மாலை நேரம் வந்தது. அவையும் முடிவுற்றது.

## இரண்டாம் நாள் நிகழ்ச்சிகள்

குறிப்பிட்ட அதே இடத்தில் காலை 7-30 மணிக்கு மக்கள் கூட்டம் சேர்ந்தது. கூட்டத்தில் ஏற்கெனவே விவாதத்திற்கு ஏற்கப்பட்ட பொருட்களான ஐந்து கேள்விகள் மீண்டும் படிக்கப்பட்டன.

பின்வருவனவே அந்த ஐந்து கேள்விகள்:

*1) எப்பொழுது, எதனிலிருந்து, ஏன் உலகைக் கடவுள் படைத்தார்?*

*2) கடவுள் எங்கும் நிறைந்தவரா, இல்லையா?*

*3) கடவுள் நேர்மையானவராகவும் அதே நேரத்தில் இரக்கமுள்ளவராகவும் எப்படி இருக்கமுடியும்?*

*4) வேதம் அல்லது குரான் அல்லது பைபிள் கடவுளின் வாக்கு என்பதற்கு சான்றுகள் யாவை?*

*5) வீடு என்றால் என்ன? அதனை எவ்வாறு அடைய முடியும்?*

*யார் ஆரம்பித்து இந்தக் கேள்விகளுக்கு பதில் சொல்வது என்பதை முடிவு செய்வதில் சிறிது நேரம் சென்றது. கடைசியில் ரெவரண்ட் ஸ்காட் பாதிரியார் முதல் கேள்வி பற்றிப் பேச எழுந்தார். கேள்வியே பொருளற்றது - nonsense - அதற்குப் பதில் சொல்வது பயனற்றது என்று குறிப்பிட்ட அவர், சொன்னார்: எனினும் இதைப்பற்றி விவாதிக்க வேண்டுமென்று எல்லோரும் ஒப்புக் கொண்டுவிட்டதால் இந்த விஷயத்தை எடுத்துச் சொல்கிறேன். இந்த உலகங்கள் அனைத்தையும் (Cosmos - பிரம்மாண்டம்) கடவுள் எதனின்றும் படைத்தாரென்று நமக்குத் தெரியாது என்றாலும்கூட, இந்த அளவுக்கு நாம் உறுதியாகச் சொல்கிறோம் - வெறுமையிலிருந்துதான் (வெற்றிடத்திலிருந்துதான்) இவற்றை அவர்*

உண்டாக்கினார் என்று. காரணம், முதலில் (துவக்கத்தில்) கடவுளைத் தவிர வேறு எதுவும் இருக்கவில்லை. இந்த உலகங்கள் எல்லாம் படைக்கப்பட்ட (தோற்றுவிக்கப்பட்ட) பின் எத்தனை வருடங்கள் கடந்து சென்றன என்பதும் நமக்குத் தெரியாது. அது கடவுளுக்கு மட்டுமே தெரிந்ததாகும். எனவே, இந்த பொருள் பற்றி அதிகம் சொல்வது பொருத்தமல்ல. கடவுள் ஏன் உலகைப் படைத்தார் என்றுள்ள இந்தக் கேள்வியின் மூன்றாவது பகுதிக்கு முற்றிலும் சரியான விடையைக் கூற நம்மால் இயலாது. நமக்குத் தெரிந்ததெல்லாம், இந்த படைப்புகள் அனைத்தையும் மனிதர்களின் மகிழ்ச்சிக்காகவே அவர் இயற்றியுள்ளார் என்பதுதான். இறக்கக் கூடியவர்களாகிய நாம் இன்ப நிலை பெற்று எல்லாவிதமாகவும் மகிழ்ச்சியாக இருக்க வேண்டுமென்பதற்காக கடவுள் உலகைப் படைத்தார்.

மௌல்வி முகம்மது காசிம்:- கடவுள் தம்முடைய உடலிலிருந்து இவ்வுலகங்களைத் தோற்றவித்தார். நாம் அவரிலிருந்து வேறுபட்டிருக்கவில்லை. நாம் அவரிலிருந்து வேறுபட்டவர்களாக இருந்தால், அவருடைய ஆற்றலின் கீழ் இருக்க மாட்டோம். அனைத்துலகங்களின் படைப்பு (தோற்றம்) எப்பொழுது நடைபெற்றது என்ற கேள்விக்குப் பதில் சொல்வது பயனற்ற வெறும் கற்பனை ஆகும். ஏனென்றால், ரொட்டியை சாப்பிடுவது பற்றித்தான் கவனிக்கவேண்டுமே தவிர, அது சமைக்கப்பட்டதற்கு எடுத்துக்கொண்ட காலம் பற்றி அல்ல. இந்த உலகம் மனிதர்களுக்காக தோற்றுவிக்கப்பட்டது. அவரை வணங்குவதற்காக, சிந்தித்துப் பார்த்தீர்களானால், இந்த நிலப்பகுதி (உலகம்) நமக்காக உண்டாக்கப்பட்டது, நாம் உலகத்துக்காக அல்ல என்பது தெளிவாகும். ஏனென்றால், நாம் உயிர்வாழவில்லை எனில் இந்த உலகத்துக்கு இழப்பு எதுவும் இல்லை. ஆனால், இந்த உலகம் இல்லை என்றால் நாம் மிகவும் துன்புறுவோம். அதேபோல, தண்ணீர், காற்று, நெருப்பு பிற இயல்புகள் அனைத்தும் மனிதனுக்காகவே படைக்கப்பட்டன. அனைத்துலகங்களிலும், பிற எல்லா உயிர்களையும்விட, மனிதனே மேலானவன். அவனுடைய மேன்மைக்குச் சான்றாகவே அறிவு அவனுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. சுருங்கக்கூறின், கடவுள் தம்மை வணங்க வேண்டுமென்பதற்காக மனிதனையும், அவனுக்காக இந்த உலகத்தையும் உண்டாக்கினார்.

## சுவாமி தயானந்த சரஸ்வதி

இங்குள்ள முகம்மதியர், கிறித்தவர், பிறர் அனைவருக்கும், இந்த அவை (மன்றம்)யானது உண்மையை அறிந்து தேர்வதற்காகக் கூடியுள்ளது என்கிற பொருளைத் துவக்கத்திலேயே கவனத்தில் கொண்டுவர விரும்புகிறேன். இந்தக் கூட்டத்தை ஏற்பாடு செய்தவர்களின் நோக்கம், உண்மைச் சமயம் எது என்பதைக் கண்டு, கேட்டு அறிவதே ஆகும். வெற்றி அல்லது தோல்வி மனப்பான்மை எவருக்கும் வேண்டாம். காரணம், உண்மை எப்பொழுதும் நிலைத்து நிற்கும்; பொய் எப்பொழுதும் அழிந்துவிடும், என்பதை நல்லோர் அனைவரும் ஏற்றுள்ளனர். கிறித்தவப் பாதிரியார் பொய் சொன்னார் என்று முகம்மதியர்களும், முகம்மதியர் பொய் சொன்னார் என்று பாதிரியார்களும் கூறிக் கொள்வதைத் தவிர்க்க வேண்டும். கற்றறிந்த பெரியோர்கள் அவர்களுக்குத் தெரிந்த அளவுக்கு உண்மையை நயமான மொழியில் கூறிப் பொய்யைப் புறக்கணித்தால் மக்கள் அனைவரும் உண்மையின் பக்கம் வந்து சேர்வார்கள். அறிஞர்கள் ஒருவரை ஒருவர் குற்றம் குறை கூறிக் கடுமொழி பேசுவதை எப்பொழுதும் தவிர்க்க வேண்டும். வேதனைத் தரக்கூடிய "நான் வென்றேன், நீர் தோற்றீர்" என்பது போன்ற புண்படுத்தும் பேச்சுக்களையும் விலக்க வேண்டும். ஒருதலைச் சார்பாக இருப்பதை விட்டுவிட்டு எல்லோரும் உண்மையே பேசவேண்டும். பொதுவாகக் குற்றச்சாட்டுக்கள் அறிவில்லாதவர்களிடமிருந்தே எழுகின்றன; அறிஞர்களிடமிருந்து அல்ல. விவாதத்தில் மட்டுமல்ல, எங்குமே எவரும் கடுமொழி கூறலாகாது.

இனி, என்னுடைய சிற்றறிவுக்கும், படிப்புக்கும் இயன்ற அளவில், அந்த வெளிச்சத்தில், முதல் கேள்விக்கு விடை கூறுகிறேன். கேள்வி, 'எதனின்று, எப்பொழுது, ஏன் கடவுள் உலகைப் படைத்தார்?' என்பது.

பிரம்மாண்டம் எனப்படும் இவ்வுலகங்கள் அனைத்தையும், இறைவன் இயற்கை எனப்படும் முதல் இயற்கையினின்றும் தோற்றுவித்தான். இதற்கு, (அவ்யக்தம், அவ்யாக்ருதம்) தெளிவற்ற இயற்கைத் தனிப் பொருள், பரமாணுக்கள் என்றும் பெயர்கள் உண்டு. இந்த முதல் இயற்கையே, அனைத்துலகின்

பொருளாகு கா்ரணம் ஆகின்றது. சாத்திரங்கள் இதனை என்று முள்ளதாக, (நித்தியப் பொருளா்க)க் கூறுகின்றன். கடவுளுக்கு முதலும், முடிவும் இல்லை என்பது போன்றே இயற்கைக்கும் முதலும் முடிவும் இல்லை. காணப்படுகின்ற இந்தப் பிரம்மாண்டத்தின் காரணமாக உள்ள இந்தப் பரமாணுக் கூட்டத்தில், ஒரு அணு கூட கூடுவதும் இல்லை; குறைவதும் இல்லை.

(பிரம்மாண்டம், ஜகத் என்றெல்லாம் கூறப்படும்) இவ்வுலகைத் தோற்றுவிக்கும் பொழுது, இறைவன் இந்தக் காரணத்தையே செயல் உருவத்திற்கு மாற்றுகிறான். காணப்படுகின்ற இவ்வுலகு, அதாவது செயல் உல்குக்கு காரணமாக உள்ளது இந்த முதன்மையான இயற்கையே. கண்ணுக்குத் தென்படாதப் பொருள்களைச் சேர்த்து அவன் இந்த பார்வைக்குப் புலனாகும் பொருள்களை உண்டாக்கு-கின்றான். அப்பொழுது, இந்த திடப்பொருள்கள் நம் கண்ணுக்குத் தென்பட்டு, நாம் செயலாற்றத் தக்கவாறு அமைகின்றன. பலவிதமாகத் தோன்றுகிற இவ்வுலகப் பொருட்கள் அனைத்தையும், ஆதாரமான இயற்கை என்கிற இந்த பொருளாகுக் காரணத்திலிருந்தே இறைவன் தோற்றுவித்திருக்கின்றான். பிரளயம் எனப்படும் உலக அழிவுக் காலத்தில், இந்தத் திடப்பொருள்களைத் தனித்தனியே பிரிந்து விடவும் செய்கிறான். இந்த திடப்பொருள்கள் பார்வைக்குப் புல்னாகும்படி உள்ளவை, பார்வைக்குப் புலனாகாத பொருள்கள் ஆகி விடுவதால், அவை கண்ணுக்குத் தெரிவதில்லை. அவை பரமாணுக்களாக ஆகாயத்தில் பரவி விடுகின்றன. எனவே, இவ்வாதாரப்பொருள் எப்பொழுதும் அழிவதில்லை என்பது தெளிவு. பிரளயம் என்பது கண்ணுக்குத் தெரியாத நிலையைக் குறிக்கும். பரமாணுக்கள் பிரிந்தால் அவை கண்ணுக்குப் புலனாவதில்லை; சேரும் போ்து பார்வைக்குப் புலனாகும் பொருட்களாகி மீண்டும் புலப்படும் நிலை பெறுகின்றன. இறைவனின் என்றுமுள்ள ஆக்கம்-அழித்தல் விதிமுறை இதுவே. இறைவன் எத்தனை முறை தோற்றுவிக்கிறான், எத்தனை முறை அழிக்கிறான் என்பது நம்மால் கணக்கிட முடியாததாகும். எவராலும் கணக்கிடமுடியாதது.

இப்பொழுது வெறுமையிலிருந்து எதுவும் உண்டாகாது' என்றும், ஏதோ சில சொற்கள் சொல்லப்படுவதாலும் உலகு உண்டாகாது என்றும் தெரிந்து கொண்டீர்கள். இவையெல்லாம் ஆதாரமற்றவை; நடைபெற இயலாதவை. இப்படியெல்லாம் சொல்வது 'மலடியின் மகனுடைய திருமணத்தை என் கண்களால் கண்டேன்' என்று கூறுவது போலாகும். மலடி என்றால், அவளாள் குழந்தை பெற இயலாது; மகனே இல்லாத பொழுது, அவனுக்குத் திருமணம் நடைபெற்றதைக் காண்பது எப்படி முடியும்? மேலும், வெறுமையிலிருந்துதான் உலகம் உண்டாக்கப்பட்டது என்று சொல்வது 'நான் இருக்கவில்லை, என்றாலும் இப்பொழுது இங்கே இருக்கிறேன்' என்பதுபோலவோ, அல்ல 'பாம்பு புற்றில் இருக்கவில்லை, ஆனால் அங்கிருந்து தான் அது வந்தது' என்று கூறுவது போலவோ ஆகும். இத்தகைய ஆதாரமற்ற கூற்றுக்களை அறிஞர்கள் மதிக்கமாட்டார்கள். இல்லாத ஒரு பொருளை, பிறகு இருக்கிறதாக எப்படிச் சொல்வது? எடுத்துக்காட்டாக இங்கே பேச வந்துள்ள பேச்சாளர்களாகிய நாங்கள், அவரவர்களுடைய ஊர்களில் இல்லாவிட்டால் சாந்தாபூருக்கு வந்து சேர்ந்திருக்க மாட்டோம், ஆகையால், சாத்திரங்கள் கூறுவது போல-

"நாஸத ஆத்ம லாப;। ந ஸத ஆத்ம ஹானம்" அதாவது, இல்லாதது என்றும் இருக்கப் போவதில்லை; உள்ளது இனிமேலும் இருக்கும். இதனின்றும், உள்ளதிலிருந்து மட்டுமே வேறொன்று உண்டாகும்; இல்லாததிலிருந்து ஒன்றும் வராது என்பது தெளிவாகிறது. இல்லாததிலிருந்து ஒன்றும் வராது என்பதே காரணம். இந்த உலகில் காரணமின்றி எதுவும் இல்லை. எனவே உள்ளதாகிய பொருளிலிருந்துதான் ஒன்று தோன்றும்; வெறுமையிலிருந்து (சூனியத்திலிருந்து) எதுவும் வெளிவராது. இதற்கு மாறாகச் சொல்வது எதுவும் தனக்குத் தானே முரணாகிற பொருளாகும். முதலில், ஒரு பொருள் முழுவதுமாக இல்லை என்று ஒப்புக்கொண்டுவிட்டு, பின்னர் அது இருக்கிறது என்று கூறுவது முற்றிலும் தெளிவான எளிய முரண்பாடே. படித்தவர் எவரும் இதனை நம்பமாட்டார். ஆதாரமின்றி செயல் உண்டாயிற்று என்பதை எந்தச் சான்றாலும் உறுதி செய்யவும் இயலாது. ஆகையால், சூன்யம்-வெறுமையிலி

ருந்து உலகம் தோன்றியது அல்லது வெறும் சொல்லிலிருந்து அது உண்டாயிற்று என்பது நடைபெறாததாகும். எனவே, கடவுள் என்றுமுள்ளதாகவே பொருளாகும் முதல் காரணத்திலிருந்து - முதல் இயற்கைப் பொருளிலிருந்து உலகைத் தோன்றுவித்தார், வேறு எவ்விதமாகவும் அல்ல என்பதையே நம்புதல் வேண்டும்.

இனி, இங்கு இரண்டு பொருட்கள் சிந்தனைகுரியனவாகின்றன. முதலாவது, கடவுள் உலகின் பொருளாகு காரணம் என்றால், காணப்படும் இவ்வுலகில் உள்ள பொருட்களுடன் அறிவு - அறியாமை, இன்பம் - துன்பம், பிறப்பு - இறப்பு, ஆதாரம் - இழப்பு, மேலுலகம் - கீழுலகம், பசி - தாகம், பற்று - விடுதலை, காய்ச்சல் - பிறநோய் நொடிகள் இவையாவும் கடவுளுக்கு உண்டு, கடவுளில் உண்டு என்று ஆகும். மேலும், இந்தக் கருத்துப்படி நாய், பூனை, திருடன், தீயோன் - எவ்லோருமே கடவுள் தாம்!

இரண்டாவதாக, அடிப்படைப் பொருள் என ஒன்று ஏற்கெனவே இருந்தது என்பதை ஒப்புக்கொண்டால், அப்பொழுது உலகைச் செய்கிறவர், அமைக்கிறவர் என்கிற நிலையில் கடவுள் இருக்கிறார்.

இப்பொழுது, இவ்விரண்டு பொருட்களையும் பற்றி நாம் சிந்திக்கும்பொழுது, மூவகைக் காரணங்கள் (ஆதாரங்கள்) உண்டு என்பது புலனாகும்.

*1)* **உபாதான** காரணம் என்பது ஒரு பொருள் உண்டாவதற்கு வேண்டப்படும் அடிப்படைப் பொருள் அல்லது ஆதாரமாக இருப்பதாகும். எடுத்துக்காட்டாக, பானை செய்வதற்குக் களிமண், நகை செய்வதற்குத் தங்கம், ஆடை நெய்வதற்குப் பருத்தி இவையெல்லாம் அவ்வப் பொருட்கள் செய்வதற்கு இருந்தே ஆகவேண்டிய அடிப்படையான முதற்பொருட்களாகும். (ஆதாரப் பொருட்கள்)

*2)* **நிமித்த** காரணம் எனப்படுவது திறமை ஆதாரம் ஆகும். பானை செய்வதற்கான அறிவுத்திறமை அல்லது ஆற்றல் குயவரிடம் உள்ளது என்பது போன்றதாகும் இது.

*3)* **சாதாரண** காரணம் எனப்படுவது கருவி ஆதாரம்

ஆகும். மேற்கூறிய பானை எடுத்துக்காட்டில், பானை செய்வதற்கு உதவியாக சக்கரம், நேரம், திசை போன்று ஆதாரமாக இருக்கின்ற கருவிகளாகும்.

இப்பொழுது, உலகின் பொருட் காரணம் கடவுளே என்று வைத்துக்கொண்டால், நாம் அவரை உலகப் பொருளாக்கி விடுகிறோம். அப்படி ஆக்கிவிட்டபின், அழியக்கூடிய உலகப் பொருளாகவே அவர் ஆகிவிடுகிறார். ஏனெனில், பானை அது செய்யப்பட்ட மண்ணிலிருந்து வேறுபட்டது - மாறுபட்டது அல்ல. அவரைச் செயல் - திறமை ஆதாரமாக்கினால் முதன்மைப் பொருட்களில்லாமல் உண்டாக்க அவரால் இயலாது - களிமண் இல்லாமல் குயவரால் பானை செய்ய முடியாது என்பது போல. மேலும், அவர் உலகின் சாதாரண துணை ஆதாரம் தான் என்றாலோ, பானை செய்பவர் இல்லாமல், பானை தானே உண்டாகாதது போல, இயற்றுபவர் இன்றி இவ்வுலகம் தானே தோன்றவும் முடியாது. கடைசியாகக் கூறப்பட்ட இரண்டு பொருட்கள் அவர் வேறு ஒரு திறமையை நம்பியிருக்க வேண்டியவர் என்பதோடு, அவரே உயிரற்ற இயங்காப்பொருள் என்றும் ஆக்கிவிடும், எனவே, கடவுள் தாமே இவ்வுலகப் பொருட்களாகக் காட்சியளிக்கிறார் என நம்புகிறவர்கள், அவரைத் திருடர் போன்ற தீயோரும் ஆவர் என்கிற நிலைக்குக் கொண்டு செல்கின்றனர். இவ்வுலகின் முதன்மைப் பொருளாகு ஆதாரம், கடவுளைப் போன்றே அவருடன் என்றுமுள்ள (நித்தியப்) பொருள் என்றும், அவர் இதனின்றும் இவ்வுலகங்களைப் பல்வேறு வடிவங்களில் தோற்றுவித்துள்ளார் என்றும், நம்புதல் வேண்டும்.

அது போன்றே, ஆத்மாவும் ஒரு என்றுமுள்ள பொருள்தான். பருப் பொருளாகிய இவ்வுலகம் மூல இயற்கையின் விளைவே. 'ஜீவர்கள்' எனப்படும் 'ஆத்மா'க்களின் 'கர்மங்கள்' எனப்படும் செயல்களும், அவற்றின் இடையறா ஒழுக்கினால் அனாதி - அதாவது சாதாரண ஆதார வடிவினால், என்றும் நிலைபெற்றிருப்பதாகும். இவ்விதம் ஏற்றாலன்றி, உலக தோற்றத்தை (படைப்பினை) விளக்குவது இயலாது.

இனி, உலகம் தோன்றி எத்தனை காலம் ஆயிற்று என்கிற கேள்விக்கு என்னுடைய பதில்:

சகோதரர்களே, நான் கூறுவதைக் கவனமாகக் கேட்பீர். வேத சமயத்தைப் பின்பற்றுவோராகிய எங்களால் தான் இந்த வினாவுக்கு விடை அளிக்க முடியும்; வேறு எவராலும் அல்ல. ஏனென்றால், உங்களுடைய சமயங்கள் யாவும் பதிமூன்று நூறு ஆண்டுகளுக்கு முன்போ, பதினெட்டு நூறு ஆண்டுகளுக்கு முன்னரோ அல்லது ஐந்து நூறு ஆண்டுகளுக்கு முன்போ தாம் தோன்றின. இதனால்தான், உலகத்தோற்றம், காலம் பற்றிய வரலாறு உங்களுடைய சமயங்களில் இல்லை. ஆரியர்களோ, (இந்துக்களோ) உலகம் தோன்றியதிலிருந்தே இதனை அறிந்துள்ளனர்.

இந்த நாட்டிலிருந்துதான் பிற எல்லா நாடுகளுக்கும் அறிவு சென்று பரவியது. எல்லா நாடுகளின் வரலாற்றிலும் 'ஆரிய வர்த்தம்' என்கிற இந்த இந்தியத் திருநாட்டிலிருந்துதான் முதலில் எகிப்து நாட்டிற்கும், அங்கிருந்து கிரேக்கர்களின் நாட்டிற்கும், பின்னர் அங்கிருந்து ஐரோப்பாவுக்கும், உலகின் பல்வேறு நாடுகளுக்கும் அறிவு பரவியுள்ளதாக, உலக வரலாற்று ஆசிரியர்கள் ஒரு மனதாக ஏற்று வந்துள்ளனர்.

எனவே, இந்த உலக தோற்றத்தின் வரலாறு, வேத சமய இலக்கியம் அல்லாத வேறு எந்த சமயத்தின் இலக்கியத்திலும் இடம் பெறவில்லை. இனி கவனமாகக் கேளுங்கள்: ஆரியர்கள் (இந்துக்கள்) ஆகிய எங்களுக்கு, இவ்வுலகின் தோற்றம் - மறைவு பற்றிய அறிவு, வேதம் முதலான புனித அறிவியல் நூல்களிலிருந்து கிடைத்துள்ளது. அதன்படி நாலாயிரம் 'சதுர் யுகம்' கொண்டது ஒரு 'பிரம்ம தினமாகும்' - அதாவது 'பிரம்மம்' எனப்படும் பரம்பொருளின் ஒரு பகல் பொழுது. அதே கால அளவான 'சதுர் யுகங்கள்' ஒரு 'பிரம்ம ராத்திரி' ஆகும். அதாவது பரம்பொருளின் இரவுப் பொழுது. உலகத் தோற்றம் நிலைத்து இருக்கும் காலமே 'பிரம்ம தினம்' ஆகும். இவ்வுலகம் அழிந்து மறைந்துவிட்ட காலமே 'பிரம்ம ராத்திரி' ஆகும். இந்த உலகத் தோற்ற காலத்திற்கே 'கல்பம்' என்று பெயர். இது பதினான்கு 'மன்வந்தரம்' கொண்டது. இதனில், எழுபத்தொன்று 'சதுர் யுகங்கள்' கொண்டது, ஒரு 'மன்வந்தரம்' எனப்படும். இப்பொழுது ஏழாவதான 'வைவஸ்வத மன்வந்தரம்' நடக்கிறது. இதற்கு முன், ஆறு 'மன்வந்தரங்களான' 'ஸ்வாயம்புவ',

'ஸ்வரோசிஷ', 'ஔத்தமி', 'தாமஸ', 'ரைவ', 'சாக்ஷுஷ', என்பன கடந்துவிட்டன.

வேறுவிதமாக சொல்வதென்றால், 1877 எனப்படும் கிறித்தவ ஆண்டாகிய இக்காலத்திற்கு, உலகம் தோன்றி நூற்றுத் தொண்ணூற்று ஆறு கோடி எட்டு லட்சத்து ஐம்பத்திரண்டாயிரத்து தொள்ளாயிரத்து எழுபத்து ஆறு ஆண்டுகள் ஆகியுள்ளன. இனியும், இருநூற்று முப்பத்து மூன்று கோடி முப்பத்திரண்டு லட்சத்து இருப்பதேழாயிரத்து இருபத்து நான்கு ஆண்டுகள் இந்தப் படைப்பு நீடிக்கும். இத்தகையப் பொருட்கள் எமது (இந்து-ஆரிய) வரலாற்றில் மிக நுணுக்கமாகவும், திட்டவட்டமாகவும் கூறப்பட்டுள்ளன.

எமது வானநூல் வல்லாரும், ஒருவொரு ஆண்டினையும் தக்கவாறு கூட்டியும், கழித்தும் கணக்கிட்டு வந்துள்ளனர். 'ஜோதிஷம்' எனப்படும் வான நூல் அடிப்படையில், அவர்கள் அதனைத் தம் 'பஞ்சாங்கங்'களில் பதிவு செய்து வருகின்றனர். ஆண்டுக்கு ஆண்டு ஒரு ஆண்டினை அவர்கள் கழித்தும் கூட்டியும் வருகின்றனர். பாரத நாட்டைச் சேர்ந்த வரலாறுகள் யாவும் இந்த உண்மைகள் பற்றி ஒருமித்த கருத்து உடையனவாக இருக்கின்றன. இதுபற்றி அவைகளுக்கிடையே கருத்து வேறுபாடு கிடையாது. ஜைனர்களும், முகம்மதியர்களும் பாரதத்தின் வரலாற்று நூல்களை அழிக்கத் துவங்கிய பொழுது, ஆரியர்கள் (இந்துக்கள்), படைப்பு வரலாறு பற்றிய இந்தக் கொள்கையை 'சங்கல்பம்' எனப்படும் மனப்பாடமாக உள்ள யுகக் கணக்கீட்டு முறையினை அமைத்தனர். இது இன்றும் சிறுவர் முதல் வயதானவர் வரை எல்லோராலும் நாள்தோறும் கூறப்படுகிறது. அந்த 'சங்கல்பம்' எனும் படைப்புக் கணக்கு முறை வருமாறு:-

"ஓம் தத் ஸத் ஸ்ரீ ப்ரஹ்மணே த்விதீய ப்ரஹரார்தே வைவஸ்வத மன்வந்தரேஷ்டா விம்ஷதி தமே கலியுகே கலி ப்ரதம சரணே ஆர்யா வர்த்தாந்த ரைக தேசே அமுக நகரே அமுக ஸம்வத்ஹரா யனர்து மாஸ பக்ஷ தின நக்ஷத்ர லக்ன முஹூர்த்தேஃத்ரேதம் க்குத்ரம் க்ரியதே வா"

பொருள்: உண்மையும் சத்துமாகவும் விளங்கும் பரம்பொருளே, பிரம்ம தினத்தினுடைய இந்த இரண்டாம் பகுதியின் 'வைவஸ்வத மன்வந்தரத்தின்' 28-வது கலியுகத்தின் முதல் பாதத்தின் இன்ன ஆண்டில் அதனுடைய இன்ன 'அயனத்'தில், 'ருது'வில், 'மாதத்தி'ல் 'பக்ஷ'த்தில், 'தினத்'தில் 'நக்ஷத்திரத்'தில், 'லக்னத்'தில், 'முஹூர்த்தத்'தில் நான் இந்தச் செயலைத் தொடங்குகிறேன்.*

இது பற்றிச் சிந்தித்து அறிகிற எவரும் இந்த உலகத் தோற்ற - ஆண்டினைக் கணக்கிட இயலும். இதனை நம்ப மறுக்கிற எவரும் தவறு செய்கிறவர் ஆவர். ஆரியர்களின் (இந்துக்களின்) 'பஞ்சாங்கம்' எனப்படும் இந்தக் கணக்கு முறை இப்பொழுது தொடர்ந்து வரும் ஆண்டுகளைக் குறிப்பதுடன், கடந்துபோன ஆண்டுகளின் எண்ணிக்கையினையும் காட்டுகிறது. இந்தக் கணக்கு பற்றிய உண்மையே எல்லா மறுப்புக்களையும் சந்திக்க வல்லது. உலகத் தோற்றம், வான நூல்கள் இதனை உறுதிப்படுத்துகின்றன. எனவே, இது பற்றி ஐயத்திற்கு இடமில்லை. மேலும், இந்த வேதக் கணக்கை ஒப்புக் கொள்ளாதவரை, காலக் கணக்கு பற்றி உம்முடைய சமயம் என்ன சொல்கிறது என்று கேட்டால், அவர் இந்த உலகம் தோன்றி, ஆறு, ஏழு அல்லது எட்டு ஆயிரம் ஆண்டுகள் தாம் ஆயிற்று என்று பதில் சொல்வார். ஏனென்றால், அவருடைய நூல்களில் அப்படித்தான் சொல்லப்பட்டு இருக்கிறது. இது ஏற்கத்தக்கதன்று.

மேலும் குறிப்பிட வேண்டிய பொருள், உலகத்தோற்றம் பற்றிய ஆரியர்களின் (இந்துக்களின்) இந்தக் கணக்கு விவரங்களை, மண்-பாறை படிமத் துறை (Geology) ஆய்வாளர்களும், இன்றைய அறிவியல் அறிஞர்களும் ஆதரிக்கின்றனர்.

---

* ஆங்கில மொழி பெயர்ப்பாளர் குறிப்பு: இப்பகுதியின் மொழி பெயர்ப்பு ரிஷி தயானந்தர் இயற்றிய "ரிக் வேதாதி பாஷ்ய பூமிகா" (ரிக் முதலிய வேதங்களின் விளக்கத்திற்கு முன்னுரை) நூலின் ஆங்கில மொழி பெயர்ப்பாளர் காசிராம் அவர்கள் மொழியாக்கம் செய்தவாறு ஆகும். இந்த சங்கல்ப சுலோகத்தை ரிஷி தயானந்தர் சாந்தாபூர் சமயப் பட்டிமன்றத்தில் மொழி பெயர்க்கவில்லை.

இந்த உலகின் வயதை வேத சமயத்தால் கணக்கிட முடியும்; பிற சமயங்களால் அன்று. . எனவே, படைப்பு தோன்றிய காலம் பற்றி ஆரியர்கள் (இந்துக்கள்) கூறுவதையே நாம் எல்லோரும் நம்புதல் வேண்டும்.

## எதற்காகக் கடவுள் இப்பிரம்மாண்டத்தை இயற்றினார்?

ஆத்மாவும், இவ்வியற்கையின் காரணம் எனும் தோற்றப்பொருளும், காலவெள்ளத்தில் (காலக்கணக்கில்) என்றுமிருப்பவை. நாம் காணுகின்ற இவ் வுலகம் (மூலப்பிரக்ருதி) ஆதார இயற்கையின் விளைவே. ஊழிக் காலத்தில், ஆத்மாக்கள் அதாவது உயிர்களின் சில செயல்கள் உபரியாக அல்லது மீதமாக எஞ்சி நின்றுவிடுகின்றன. எனவே, இறைவன் அவர்களுடைய செயல்களின் பலன்களை, அவர்கள்- அனுபவிக்க வேண்டு மென்பதற்காக, உலகை இயற்றுகின்றான். இவ்விதமாக அவர் தன்னுடைய நடுநிலை பிறழாத நேர்மையை வெளிப் படுத்துகின்றார். மேலும், இறைவனிடம் எல்லையற்ற அறிவு, திறமை, வல்லமை, அருள் என ஒப்பரிய உயரிய குணங்கள் உள்ளன. எல்லையற்ற ஆற்றலுள்ள அவர், இவையனைத்தும் பயன்படவேண்டும், நிறைவேற வேண்டும் என்பதற்காகவே, இப்"பிரம்மாண்ட"த்தை உண்டாக்கினார். காண்பதற்காகக் கண்ணும், கேட்பதற்காகச் செவியும் உள்ளது போன்றே, இறைவனின் இயற்றும் திறமையும் உலகின் படைப்பு களுக்காகவே. எனவே, இறைவன் தன்னுடைய ஆற்றல் பயனுள்ளதாக அமைந்து, எல்லா உயிர்களும் இவ்வுலகப் பொருட்களைத் துய்த்து மகிழ வேண்டுமென்பதற்காகவே உலகைத் தோற்றுவித்துள்ளான். அறம், பொருள், இன்பம், வீடுபேறு இவற்றை உயிர்கள் அடையவேண்டும்; அவர்களுடைய வாழ்க்கை நிறைவு பெற வேண்டும் என்பதற்காகப் புலன்கள் அளிக்கப்பட்டுள்ளன. உலகின் படைப்புக்கு மேலும் பல நோக்கங்கள் உண்டு. நேரமின்மையால் நாம் இங்கு அவற்றைக் கூற முடியவில்லை. அறிஞர்கள் எளிதில் அறிந்துகொள்வார்கள்.

### ஸ்காட் பாதிரியார்

எல்லையுள்ளது தோற்றமற்றதாகவும், முடிவற்றதாகவும் அல்லது என்றுமிருப்பதாகவும் இருக்க முடியாது. இந்த உலகுக்கு எல்லையுண்டு. எனவே, இது நிலையானதல்ல. எதுவுமே தானாகவே தோன்றாது. தம்முடைய எல்லையற்ற ஆற்றலால் கடவுள் தனி ஒருவராக எல்லாவற்றையும் படைத்தார். எந்தப் பொருளிருந்து கடவுள் உலகைப் படைத்தார் என்று எவருக்கும் தெரியாது. பண்டிட்ஜியும் (சுவாமி தயானந்தரும்) எந்தப் பொருளால் இந்த உலகைப் கடவுள் படைத்தார் என்று சொல்லவும் இல்லை.

### மௌல்வி முகம்மது காஸிம்

எல்லாப் பொருட்களும் நிலையானவை என்றால் கடவுளை நம்புவதில் பயனில்லை. இந்த உலகம் தோன்றிய காலத்தைப் பற்றிச் சொல்ல எவராலும் இயலாது.

### சுவாமி தயானந்த சரஸ்வதி

*(1. ஸ்காட் பாதிரியாருக்கு விளக்கம்).*

பாதிரியார் அவர்கள், நான் சொன்னதைப் புரிந்து கொள்ளவில்லை. இவ்வுலகின் ஆதாரப் பொருள்தான் நிலையானது என்று நான் சொன்னேன். செயல் வடிவானது (பலன்) ஒரு பொழுதும் நிலையானதல்ல. எடுத்துக்காட்டாக, எண் சாண் அளவுள்ள என்னுடைய இந்த உடல், நான் பிறப்பதற்கு முன்பு இருந்ததில்லை; இறப்புக்குப் பின்பு இது இருக்கப் போவதில்லை. ஆனால், இந்த உடலினை அமைத்துள்ள அணுக்கள் ஒரு பொழுதும் அழிய மாட்டா. என் இறப்புக்குப்பின் அவை தனித்தனியே பிரிந்து வானில் பரவிவிடும். சேர்தல், பிரித்தலாகிய அவற்றின் இன்தன்மை அல்லது திறன் அவற்றில் எப்பொழுதும் இருக்கும். எடுத்துக்காட்டாக, மண்பானை, அது அமைக்கப்படுவதற்கு முன்பு, அது இப்பொழுது காணப்படுகின்ற வடிவத்தில் இருக்கவில்லை; உடைக்கப்பட்ட பிறகு அது தொடர்ந்து இருக்கப் போவதும் இல்லை. ஆனால், அது அமைக்கப்படுவதற்கு ஆதாரமான மண் (பிருதிவி) அழியாது, அழிக்கப்படமாட்டாது. சேர்க்கைப் பண்புள்ள

அதன் தன்மையே, பொருள்களை உருவாக்கச் செய்கிறது. இந்தத் தன்மை மண்ணில் இயல்பாக உள்ளது. அந்த மண்ணில் உள்ள அணுக்கள் சேர்தல், பிரிதல் எனும் தன்மை உள்ளனவாக இருக்கின்றன. இந்த உலகப் படைப்பு முழுமையும் "பரமாணு"க்களால் ஆனது என்பதைத் தெளிவாகப்புரிந்து கொள்ள வேண்டும். இந்த அணுக்கள் என்றும் உள்ளவை; காணும்பொருட்கள் அவ்வாறு அல்ல. இவ்வுலகில் உள்ள பொருட்கள் தாமே உண்டானவை என்று நான் எப்பொழுது சொன்னேன்? நான் சொன்னதெல்லாம், இறைவன் முதன்மையாகிய பொருட் காரணத்தால் உலகை இயற்றினான் என்பதேயாகும்.

கடவுள் தம்முடைய ஆற்றலால் உலகை உண்டாக்கினார் என்று பாதிரியார் சொன்னார். அந்த ஆற்றல் ஏதேனும் பொருளா, அல்லது, ஒன்றுமே இல்லையா என்று அறிய நான் விரும்புகிறேன். அது ஒரு பொருள் என்றால் அந்தப் பொருள் நிலையானது. அது ஒன்றும் இல்லை என்றாலோ, அதனின்றும் எதுவும் தோன்றாது. எதிலிருந்து இவ்வுலகம் தோற்றுவிக்கப்பட்டது என்று நான் சொல்லவில்லை என்று பாதிரியார் கூறினார். நான் சொன்னதை அவர் சரிவரக் கேட்காமிலிருக்கலாம். இந்த உலகத்தோற்றத்துக்கு ஆதாரப் பொருள் (அடிப்படை ஆதாரம்) இயற்கை எனப்படும் தெளிவற்ற பொருள்; அதாவது பரமாணுக்களின் கூட்டம். (மூலப்ரக்ருதி - மூல இயற்கை).

(2. மௌல்வி சாஹிபிற்கு சமாதானம்) என் பதிலுக்கு மௌல்வியாரின் விமரிசனம் பற்றி நான் சொல்ல விரும்புவது, எல்லாப் பொருட்களுக்கும் அடிப்படை ஆதாரம் நிலையானது என்கிற உண்மையே, கடவுள் மீது நம்பிக்கையைத் தேவையுள்ள தாக்கி விடுகிறது. மண்ணோ அல்லது களிமண்ணோ தானே ஒரு களமாக உருவம் பெறுகிற ஆற்றல் உடையது அல்ல. பொருள் தானாகவே உருவங்களை ஏற்றுக்கொள்ளக்கூடியது அன்று. ஏனெனில், அதற்குத் தேவையான அறிவு அதற்கு இல்லை. எந்த மனித ஆத்மாவும் அத்தகைய விளைவை உண்டாக்க முடியாது. ஒரு உரோமத்தை உண்டாக்கும் ஆற்றல் கூட மனிதனுக்கு இல்லை. அணுக்களை கைப்பற்றி அவற்றால் பொருட்களை ஆக்கும் திறன், எந்த விதமாகவும், எவருக்கும்

கிடையாது. இன்றும் "த்ரசரேணுக்"கள் எனப்படும் இரண்டு பரமாணுக்களை இணைக்கும் திறன் உள்ளவர் எவரும் இல்லை. கடவுள் ஒருவருக்கு மட்டுமே இவ்வுலகை இயற்றும் ஆற்றல் உண்டு எனப்பதையே இது காட்டுகிறது.

கண் என்கிற இந்த ஒரு உறுப்பின் படைப்பிலேயே எத்துணை திறமையும், அறிவும் வெளிப்படுத்தப் பட்டிருக்கிறது! சிந்தித்துப் பாருங்கள். இன்று வரை பெரும் உடற்கூறு நூல்வல்லாரும், மருத்துவர்களும் கண்ணைப் பற்றிப் படித்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். எனினும், அவர்கள் சேர்த்துவைத்துள்ள அறிவு அரைகுறையாகவே உள்ளது. எவ்வாறு இறைவன் அத்னை அமைத்துள்ளான், எத்தனை விதமான அழகினை அதற்கு அவன் அளித்துள்ளான் என்பதை எவராலும் முழுமையாக அறிந்து கொள்ள முடியவில்லை. சூரியர்கள், சந்திரர்கள் என்க் காணுமிந்த படைப்புகளெல்லாம் கடவுளின் படைப்பே. உயிர்களின் செயல்களுக்கான விளைவுகளை அவர் தாம் அளிக்கின்றார்; வேறு எவரும் அல்ல. எனவே கட்டாயமாகக் கடவுள் நம்பிக்கை என்பது முழுமையாக மிகவும் தேவையான ஒன்று.

## இந்தியக் கிறித்தவர் ஒருவர்

ஒன்று ஆதாரமாகவும் மற்றது விளைவாகவும் இருக்கிறது. இரண்டு பொருட்களும் நிலையானதாக இருக்க இயலாது. எனவே, இல்லாமையிலிருந்துதான் கடவுள் தம் ஆணையின் வாயிலாக உலகைப் படைத்தார்.

## மௌல்வி முகம்மது காசிம்

பண்பு, தன்மை ஆகிய இரண்டும் இருவேறுபட்டவை. இயல்பானது ஒன்று; புறப்பொருட்களிலிருந்து வருவது மற்றது. இயல்பான தன்மை இன்றியமையாததாகும்; உடன் வருவது புறத்தன்மை; வெளியிலிருந்து பெறப்படுவது. இயல்பான பண்புகள், தம்மிலே உள்ளவை; புறத்தன்மைகள் பிறவற்றிலி ருந்து தமக்குள் வருபவை. இயல்பானவை, பிறவற்றுக்கும் சென்று, அவ்வாறே ஆகி, அப்பொருள்களின் தன்மையை, பண்பினை எடுத்துக் கொள்கின்றன; ஆனால் அவற்றிலிருந்து தனித்து நிற்கின்றன. எடுத்துக்காட்டாக, கதிரவனின் வடிவம்

ஒரு களத்தில் விழுகிறது. ஆனால் களன் கதிரவன் ஆகிவிடுவதில்லை. இதனைப் போன்றே இறைவன் விரும்பத்தால் நாம் படைக்கப் பட்டிருக்கிறோம்.

## சுவாமி தயானந்த சரஸ்வதி

(இந்தியக் கிறித்தவரைப் பாத்த வண்ணம்) ஆதாரமும், செயலும் என்றுமிருப்பவை என்பதை நீங்கள் ஏன் எதிர்க்க வேண்டும்? அசையாப் பொருளான இவ்வுலகம் அமைவதற்கான பொருட்காரணம், அல்லது அடிப்படை பொருள் என்றுமிருப்பதே. எண்ணவியாலாத ஆத்மாக்களும் என்றுமிருப்பவையே. வெறுமையிலிருந்து எதுவும் உண்டாகாது. இதனை நான் முன்பே தெளிவுபடுத்தி யிருக்கிறேன். ஆற்றலால்-தான் படைப்பு உண்டாயிற்று என்று சொல்கிறீர்கள். சொல்லுங்கள், ஆற்றல் என்பது என்ன? அது ஒரு உண்மைப் பொருள் என்று நீங்கள் கருதினால், அதுவே ஆதாரமானதாகி நிலையானதாகி விடுகிறது. ஏனெனில், கடவுளின் பெயர்கள், தன்மைகள், ஆற்றல் அனைத்தும் என்று முள்ளவை; அவற்றில் எதுவும் காலத்தினால் விளைவது அல்ல.

(மௌல்வி முகம்மது காசிமுக்கு விளக்கம்): இயல்பான (இறை) குணங்களே இந்த உலகத் தோற்றம் என நீங்கள் குறிப்பிட்டால், உங்களுடைய வாதம் சரியல்ல. ஏனென்றால் பொருட்கள் அமையுமாறு செய்ய அவற்றால் இயலாது. இறைவனுடைய இயல்பான, சத்தான, ஒப்பரிய, உயரிய பண்புகளால் தான் இவ்வுலகம் உண்டாக்கப்பட்டது என்றால், அப்பொழுது உலகம் கடவுள்தான் (செயல் வடிவம் கடவுள்) என்றாகிறது.

இறைவனுடைய புறத்தன்மையான ஒப்பரிய, உயரிய பண்புகளால் உண்டான பொருள் இவ்வுலகம் என்பது உங்களது கருத்தானால் கடவுள் மீதுள்ள நம்பிக்கையுடன், இந்த பண்புகளும் நிலையானவை என்றும் நீங்கள் நம்ப வேண்டியிருக்கும். உலகப் படைப்பு, இறைவனுடைய விருப்பத்திலிருந்து உ டாயிற்று என்று நீங்கள் வலி-யுறுத்தினாலோ, இந்த றைவன் விருப்பம் என்பது பண்பா, பொருளா என்று நான் கட்கிறேன். அது பொருள் என்றால்

அது நிலையானதுதான் என்று நம்பாமலிருக்க உங்களால் முடியாது; பண்பு என்றால், இவ்வுலகம் அதனின்றும் வெளிப்பட்டிருக்கவும் இயலாது. வெறும் விருப்பத்திலின்றும் எதனையும் உங்களால் செய்ய முடியாது; அது போலவே உலகில் உள்ள உயிர்களும், பிறவும் வெறும் விருப்பத்திலின்றும் தம்மைத் தோற்றுவித்துக் கொண்டிருக்க முடியாது.

### ஸ்காட் பாதிரியார்

எங்களுக்கு இந்த அளவுதான் தெரியும்; வெறுமையிலி ருந்துதான் கடவுள் உலகை இயற்றினார். எதனால், எப்பொழுது, எப்படி என்றெல்லாம் எங்களுக்குத் தெரியாது. அதனைக் கடவுள் மட்டுமே அறிவார்; மனிதனால் அறிந்து கொள்ள முடியாது.

### மௌல்வி முகம்மது காசிம்

கடவுள் தன்னுடைய ஒளியால் (நூர்) இவ்வுலகை இயற்றினார்.

### சுவாமி தயானந்தர்

(ஸ்காட் பாதிரியாருக்கு விளக்கம்)

ஒரு செயலைக் கண்டு, நாம் அதனுடைய ஆதாரத்தைக் கற்பனை செய்ய முடியும். மண் ஜாடி, மண் அல்லது களி மண்ணின் தன்மையைக் கொண்டிருப்பது போல. வினை (செயல்) என்ற இந்த பலன் எப்பொழுதும் ஆதாரத்தின் தன்மை உடையதாக இருக்கும். மண் அல்லது களிமண்ணில் உள்ள அதே பொருளால் தான் ஜாடி அமைக்கப்பட்டிருக்கின்றது. தன்னுடைய ஆற்றலால் இறைவன் உலகை உண் டாக்கினான் என்று நீங்கள் சொல்கிறீர்கள். நான் கேட்கிறேன் அந்த ஆற்றல் நிலையானதா அல்லது குறிப்பிட்ட காலத்திற்கு மட்டுமே உள்ளதா? நிலையானது என்றால், அது ஒரு பொருள் என்றும், நீங்கள் நம்புவதுடன் உலகிற்கு அது புறப்பொருள் ஆதாரமாக உள்ளது என்றும் ஏற்க இயலும்.

(மௌலவியாருக்கு விளக்கம்)

நூர் என்றால் ஒளி. ஒளியிலிருந்து எந்தப் பொருளையும் செய்ய முடியாது. புறப்பொருள்களின் வடிவங்களைக் காண்பதற்கு அது உதவுகிறது. ஒளி வீசுகின்ற பொருளிலிருந்து விலகியிருக்க அதனால் ஒரு பொழுதும் இயலாது. இவ்வுலகிற்குப் பொருட் காரணம் என ஒன்று இல்லாமல் இருக்க முடியாது என்பது இதனின்றும் தெளிவாகிறது. நாமும் வினை அல்லது விளைவை முழுவதும் நிலையானது என்று கருதவில்லை; அந்தச் செயல் அல்லது விளைவுக்கு ஆதாரமாக உள்ளதை, ஆதாரப்பொருளாக உள்ளதை மட்டுமே நிலையானது என்கிறோம்.

## ஒரு இந்திய கிறித்தவர்

கடவுள் தம்முடைய சத்தான தன்மையினின்றும் உலகைத் தோற்றுவித்தார் என்றால், அவருடைய சத்தாக உலகம் என்றும் இருக்க வேண்டும். அவரும் உலகில் என்றும் நிலைத்திருக்க வேண்டும். இது கடவுளைக் கட்டுப்படுத்துகிறது, அல்லது நிபந்தனைக்குள்ளாக்குகிறது. அப்பொழுது கடவுள் கட்டுப்பட்டவர், ஒரு விதக் கட்டாயத்துக்கு உட்பட்டவர் ஆகிறார்.

## சுவாமி தயானந்தர்

இறைவனில் சத்தாக உள்ள இவ்வியற்கை நிலையானது; இதுவே நாம் காணும் வடிவங்கள் கொண்டபொருளாக, கட்டுப்பட்ட, அல்லது நிபந்தனைக்குட்பட்ட பொருளாக உள்ளதே யன்றி, இறைவன் அல்ல. இறைவன் இந்த 'மூலப்ரக்ருதி' எனும் அடிப்படை இயற்கைப் பொருளுக்கு, பரமாணுக்களால் ஆன இந்த சத்தான பொருளுக்கு, அளவு, நீளம், அகலம், உயரம் முதலிய பரிமாணங்களை அளித்து வடிவங்கள் ஈந்தவர். அதனால்தான், உலகம் கட்டுக்குட்பட்டதாக, நிபந்தனைக் குட்பட்டதாக ஆயிற்று. ஆனால் கடவுள் கட்டுப்பட்டவர் அல்லர்.

நான் துவக்கத்தில் கூறியதை நினைவு படுத்திக் கொள்ளுங்கள். இல்லாமையிலிருந்து, வெறுமையிலிருந்து எதுவும் வராது; ஏதேனும் ஒரு பொருளிலிருந்துதான் பொருள்

உண்டாகும். உங்களுடைய கருத்துக்களும் இதனையே தான் குறிப்பிடுகின்றன. அதாவது, உலகின் ஆதாரப் பொருள் நிலையானது என்பதை.

**ஸ்காட் பாதிரியார்:**

என் முகம்மதியச் சகோதரர்களே! பண்டிதர் அவர்கள் இந்த வினாவுக்கு ஆயிரம் விதமாகப் பதில் சொல்வார்கள், நம்மைப்போன்றோர் ஆயிரம் பேர் சேர்ந்தாலும் கூட அவர் பதில் சொல்வார். அதனால், இந்த பொருளைப் பற்றிப் பேச்சை நீட்டிக்கொண்டு போவது விரும்பத் தக்கதல்ல.

காலை மணி பதினொன்று வரை வாதம் எதிர்வாதம் நடைபெற்றது. பின்னர், எல்லோரும் தத்தம் இருப்பிடம் சென்றனர். இந்தப் பட்டிமன்ற மாநாட்டிற்கு வந்திருந்த மக்களிடையேயும் இந்தச் சமய வாதங்களே தலையாயப் பேச்சாக இருந்தது. எல்லோரும் சொன்னார்கள்: ‘‘நாம் கேள்விப்பட்டதைவிட இவர் (சுவாமி தயானந்தார்) ஆயிரம் மடங்கு தெளிவான அறிவுடையவர் தாம்” என்று.

பொது மக்கள் மீண்டும் மதியம் ஒரு மணிக்கு கூடினர். சமய அறிஞர்களிடையே எந்தப் பொருளைக் குறித்து விவாதம் செய்வது என்று முடிவு ஏற்படவே சிறிது நேரம் சென்றது. ஏனென்றால், பேசுவதற்கான நேரத்தில் பெரும் பகுதி கடந்து விட்டது. மேலும் பல பொருட்கள் விவாதிக்கப் படுவதற்கிருந்தன. கடைசியாக, வீட்டுப்பேற்றை (மோட்சம்) எடுத்துக்கொள்வதென்று முடிவாயிற்று. அடுத்தாற்போல, இந்த பொருளைப் பற்றிய பேச்சை யார் துவக்கி வைப்பது என்றும் சிந்திக்கப்பட்டது. முகம்மதியர்களும், கிறித்தவர்களும், மற்றவரை முதலில் தொடங்குமாறு கேட்டுக்கொண்டு, ஒருவர்பின் ஒருவராகப் பின் வாங்கினர். இதனைக் கவனித்த சுவாமி தயாநந்தர், இந்த முறையும் ஏற்கெனவே கடைப்பிடிக்கப்பட்ட ஒழுங்கு முறையைப் பின்பற்றலாம் என்றார். அதாவது, முதலில் ஸ்காட் பாதிரியார் பேச்சை ஆரம்பிக்க வேண்டும்; அவரைத் தொடர்ந்து மௌல்விசாகிப், பின்னர் தாம் பேசுவதாகக் கூறினார். பாதியாரும், மௌல்வியாரும் இதனை ஏற்காததனால், சுவாமிகளே விடுதலை என்னும் பொருள் பற்றி பேச்சைத் துவக்கினார்.

## முக்தி எனும் வீட்டுப் பேற்றைப் பற்றி சுவாமி தயானந்தர்

முக்தி (மோட்சம், வீட்டு பேறு) என்றால் விடுதலை அதாவது, எல்லாவிதமான துன்பம் - துயர்களிலிருந்தும் விடுதலை பெற்று எல்லையற்ற ஞானமும், மகிழ்ச்சியுமே உருவான பரமனுடன் ஒன்றி ஆனந்தம் பெறுவது. பிறப்பு - இறப்பினின்றும் விடுதலை பெறுவதை அது குறிக்கின்றது. ஆனால், இதனை (முக்தி நிலை) அடைவது எப்படி? அதனை அடைவதற்கான முதற்படி நல்லொழுக்கம். அறவழி எனப்படும் நல்லொழுக்கம் என்பது என்ன? இதனை இறைவனுக்கு ஏற்புடைய, மனித ஆன்மாவுக்கும் ஏற்புடையப் பொருளாக அறிந்து கொள்ள வேண்டும். இறைவனுடையவும், ஆத்மாவினுடையவும் ஒப்புதல் பெறாத எதுவும் தவறு, பாபம் ஆகும். என் கருத்தை விளக்க ஒரு எடுத்துக்காட்டு தருகிறேன். ஒரு மனிதன் ஒரு பொருளைத் திருடுகின்றான். அதைப்பற்றி அரசன் வினவினால் அந்தக்குற்றத்தைச் செய்யவில்லை என்று குற்றவாளி மறுக்கின்றான். ஆனால் அவனுடைய ஆத்மா அவனுள் இருந்தவாறு சொல்கிறது-"ஆம், நீ குற்றவாளிதான்" என்று. அதே போல, திருட வேண்டும் என்று ஒரு மனிதன் நினைக்கிற பொழுது அவனது ஆத்மாவுடன் இரண்டற இணைந்துள்ள பரம்பொருள் (பரமாத்மா) அவனுடைய மனத்தின் ஆழத்திலிருந்து, அது தவறானது, அவன் அதனைச் செய்யக்கூடாது என்று கூறுகின்றது. (பரமாத்மா) பரம்பொருளாகிய தலைவன் அம்மனிதனின் மனத்தில், அச்செயல் பற்றி வெட்கம், ஐயம், அச்சம் முதலிய உணர்வுகளைத் தோற்றுவிக்கிறான். ஆனால், ஒரு நல்ல செயலாற்ற மனிதன் நினைக்கும்பொழுது, இறைவன் அம்மனிதனின் மனத்தில் ஒரு இன்ப உணர்வை எழுப்பி, அவ்வறே செய்யுமாறு அவனைத் தூண்டுகிறான். ஒரு மேன்மையான செயலைச் செய்யும்பொழுது, ஆத்மாவை ஒளியுறச் செய்யும் இன்ப உணர்வுகள், தீய செயல் எதனிலாவது பரம்பொருளின் ஆணையை மீறிய தீய செயல்களில் ஈடுபடுகின்ற மனிதனுக்கு எவ்விதமாகவும் விடுதலை கிடைக்காது. அத்தகைய மனிதனை அரக்கன், கொடியவன், தைத்தியன், கீழானவன் என்பர்.

இதற்கு வேதத்தில் ஆதாரம் வருமாறு:

ஓம் அஸுர்யா நாம தே லோகா
அந்தேன தமஸாவ்ருதா:
தாம்ஸ்தே ப்ரேத்யாபி கச்சந்தி
யே கே சாத்மஹனோ ஜனா:

-யஜுர்வேதம், 40.3

ஆத்மாவைத் துன்புறுத்துகின்றவன், அதாவது பரம்பொருளின் கட்டளையை மீறுகின்றவனும், தன்னுடைய ஆத்மாவின் தெள்ளறிவுக்கு எதிராகப் பேசுகின்றவனும், செய்கின்றவனும், நினைக்கின்றவனுமாகிய மனிதனின் பெயர்களே அரக்கன், பாபி, கீழானவன் முதலியனவாகும்.

வீட்டுப்பேற்றை அடைய வழிகள்:

1. மெய்ந்நெறி எனும் உண்மை ஒழுக்கம்.

2. உண்மை அறிவு அதாவது இறைவனால் இயற்றப்பட்ட வேதம் எனும் அறிவு நூல்களை, உள்ளது உள்ளவாறு கற்று அறிந்து, உயர்ந்த மெய்யறிவு பெற்று, உள்ளது உள்ளவாறே உண்மையைக் கடைப்பிடித்துச் செயலாற்றுதல்.

3. ஒழுக்கமுள்ள தெள்ளறிவாளருடன் தொடர்பு கொள்ளல்.

4. யோகப் பயிற்சி செய்து தனது மனம், புலன்கள், ஆத்மா ஆகியவற்றைப் பொய்யினின்றும் விலக்கி உண்மை வழியில் நிலைநாட்டுதலும், அறிவைப் பெருக்குவதும்.

5. இறைவனைப் போற்றி வணங்குதல்-அதாவது இறைவனுடைய குணங்களைப் போற்றிச் செவியுறுதலும், சிந்தித்தலும்.

6. இறைவனிடம் வேண்டுதல் இவ்வாறு இருக்க வேண்டும்:- உலக மனைத்துக்கும் ஒப்பறிய தலைவா, கருணைக்கடலே, எம் தந்தையே, எங்களை பொய்மையிலிருந்து விலக்கி மெய்மையில் உறுதியுள்ளவர்களாகச் செய்க. இறைவனே, எங்களை இருளினின்றும் (அஞ்ஞானத்தினின்றும்) நெறி பிறழ்ந்த தீய செயல்களிலிருந்தும் விலக்கி, கல்வி, அறிவு, நன்னெறி

முதலிய மேன்மையான செயல்களில் எப்பொழுதும் ஈடுபடுத்து. பரம்பொருளே, பிறப்பு-இறப்பு என்கிற இவ்வுலகத்துயர்களிலிருந்து விடுதலை தந்து உன்னுடைய அருட்பார்வையால் அமுதம் எனப்படும் வீட்டுப் பேற்றை அளிப்பாயாக.

மெய்யான ஈடுபாட்டுடன், மனம், மொழி, மெய் அனைத்தும் ஒன்றி, உயிரானது இறைவனைத் தொழுகின்ற பொழுது, கருணையே உருவான இறைவன் அவ்வுயிரை மட்டற்ற மகிழ்ச்சியில் நிலைப்படுத்துகின்றான். ஒரு குழந்தை வீட்டின் மாடியிலிருந்து கீழேயுள்ள பகுதிக்கும், அல்லது கீழ்ப்பகுதியிலிருந்து மாடிக்கும் சென்று அங்கே உள்ள தன் தாய் தந்தையரைச் சேர விரும்புகிற பொழுது தாயும் தந்தையும் தம்முடைய மற்ற எல்லா வேலைகளையும் விட்டுவிட்டு ஓடிச் சென்று குழந்தையை எடுத்துத் தம் மடியில் வைத்துக்கொள்கிறார்கள். குழந்தை எங்கேனும் விழுந்து அடிபட்டு துன்புறக்கூடும் என்ற ஐயம் அவர்களுக்குத் தோன்றுவதால், அவர்கள் அவ்வாறு செய்ல்படுகின்றனர். தாயும் தந்தையும் தம் குழந்தையை எப்பொழுதும் சுகமாக வைத்திருப்பதில் அக்கரையுடையோராக அதற்கான முயற்சிகளில் ஈடுபடுவது போலவே, கருணைக்கடலான பரமேசுவரனிடம் எவரேனும், ஆன்மா ஒன்றிய உணர்வுகளுடன் செல்லும் பொழுது, அவன் தன்னுடைய எல்லையற்ற வலிமையுள்ள கரங்களால் அந்த உயிரை ஏற்றுத் தன் மடியில் எப்பொழுதும் வைத்துக்கொள்கிறான். பிறகு, அவ்வுயிருக்கு எந்தத் துயரும் உண்டாவதில்லை. அது எப்பொழுதும் மட்டற்ற மகிழ்ச்சியில் திளைத்திருக்கின்றது.

வேண்டுதல், வேண்டாமையின்றி உண்மையைக் கடைப்பிடித்து பொய்யை விட்டு விட்டு மக்கள் இன்பமாக வாழ முயற்சி செய்ய வேண்டும். தவறான நடத்தை, வேண்டுதல், வேண்டாமையாகிய எண்ணம், தந்நலம் இவற்றின் விளைவே நேர்மையின்மை. எடுத்துக்காட்டாக, மௌல்வி சாகிபின் உடைகள் நன்றாக இருக்கின்றன. அந்த உடைகள் மீது நான் விருப்பம் கொண்டால், நான் எனது தன்னலத்தினால், மௌல்வியாரின் நலத்தைப் புறக்கணிப்பவன் ஆகின்றேன். இந்த நேர்மையற்ற அல்லது நெறி பிறழ்ந்தநிலைக்கு அடிப்படையாக

அமைந்திருப்பது தன்னலவுணர்வே. இந்தத் தன்னல வேட்கையானது 'வேண்டாத'த்தீய விளைவுகளில் முடியும். காமம் எனப்படும் விருப்பமானது, அதாவது இன்ப நிலை பெறவேண்டும் என்ற விருப்பமானது, அறவழி நின்று, பொருளீட்டி பொருளை அடைவதில் இருக்க வேண்டும். நெறிதவறிய வழிகளில் இன்பம் துய்க்க விரும்புவது காமம் எனப்படும். வீட்டுப்பேறு எனும் முடிவான விடுதலை அறம், பொருள், இன்பம் என்பவை மூலம்தான் கிட்டும். முன்னரே கூறியது போன்று, இறைவன் விருப்பத்திற்கு இணங்கி வாழ்க்கையை நடத்துவதே நெறிப்பட்ட வாழ்க்கை; அதனைப் புறக்கணித்தல் நெறிதவறியதாகும். இத்தகைய நெறிகளே தாம் வீட்டுப்பேற்றினையடைய வழிகாட்டுகின்றன; வேறு எதுவும் அல்ல. இந்த வீட்டுப்பேறும் தமது சொந்த முயற்சிகளால் மட்டுமே கிட்டும்; வேறு எதனாலும் அல்ல.

### ஸ்காட் பாதிரியார்

பண்டிதர் அவர்கள் - துன்பம், துயர்களிலிருந்து விடுதலையே வீட்டுப்பேறு என்று திட்டவட்டமாகக் கூறினார். ஆனால், வீட்டுப்பேறு என்பது தீயசெயல்களை விட்டு விலகி, மேலுலகம் அடைவதே என நான் கருதுகிறேன். கடவுள் ஆதாமை தூயவனாகப் படைத்தார். ஆனால் சாத்தான் தவறுசெய்ய அவனைத் தூண்டினார். ஆதாமின் இந்த வீழ்ச்சியே அவனுடைய வழித்தோன்றல் எல்லோரையும் களங்கப் படுத்திவிட்டது. கடிகாரம் செய்தவர், அந்த கடிகாரம் வேலை செய்கிறபொழுது குறுக்கிடாதது போல, எந்தவிதமான தடைகளையும் அதற்கு ஏற்படுத்தாமல் அதன் வேலையை அது செய்ய விட்டு விடுவது போல, கடவுள் மனிதனைத் தன் விருப்பம்போல் செயல்படுபவனாகப் படைத்தார். அந்த மனிதன் தன் விருப்பப்படி தவறு செய்கிறான். தன் சொந்த முயற்சியால் வீட்டுப் பேற்றை அடையவோ, அல்லது துயர்களிலிருந்து தப்பவோ, எந்தவிதமாகவும் அவனால் முடியாது. எனவே வீட்டுப்பேறு என்கிற நிலை உயிர்களின் தலைவனாகிய ஏசு கிறிஸ்துவின் மீது நம்பிக்கை இருந்தாலொழிய கிட்டாது. இந்துக்கள் பாவம்-தீய செயல்களின் காலமே கலியுகம், இந்தயுகத்தில் மனிதன் வீட்டுப்பேற்றினை அடைய மாட்டான்

என்று சொல்கிறார்கள். ஆனால் நான் சொல்கிறேன், அவர்களுக்கு வீட்டுப்பேறு கிட்டும், அவர்கள் ஏசுவின் மீது நம்பிக்கை வைத்தாலே போதுமானது என்று.

உயிர்களின் தலைவன் ஏசு சென்ற இடங்களில் உள்ள மனிதர்கள் அவருடைய (அறிவுரைகள்) அறவுரைகள் பரவிய நாடுகளில் காப்பாற்றப்பட்டிருக்கிறார்கள். கிறித்தவ சமயத்தைச் சேர்ந்தவர்களையன்றி வேறு எந்தச் சமயத்தாரிடமாவது நல்லொழுக்கம் முதலான மேன்மையான பண்புகள், குறிப்பிடத்தக்க அளவில் காணப்படுகிறதா? நம்முடைய பண்டிதர் அவர்களைப் போல மிகவும் திடகாத்திரமான, ஆற்றல்மிக்க ஒரு மனிதன் இங்கிலாந்து நாட்டில் இருந்தான். ஆனால் அவன் குடிகாரனாகவும், திருடனாகவும், காமவெறியனாகவும் இருந்தான். எனினும் கிறித்தவ சமயத்தை ஏற்றுக்கொண்ட பிறகு அவன் இந்தக்குறைகள், தவறான செயல்களிலிருந்து விடுபட்டான். அவ்வண்ணமே ஏசுவை என் காப்பவராக நான் நம்பியதும், எனக்கு வீட்டுப்பேறு கிடைத்து எல்லாவிதமான தீய செயல்களிலிருந்தும் நான் விலகியிருக்கின்றேன். ஏசுவின் விருப்பத்திற்கு இணங்கி நடந்தாலன்றி வீட்டுப்பேறு (விடுதலை) கிட்டாது. எனவே, எல்லோரும் அவரில் நம்பிக்கை வைக்கவேண்டும். அவரால் மட்டுமே வீட்டுப்பேறு (விடுதலை) தரமுடியும். அதனை அடைய இது ஒன்றுதான் வழி; வேறு எதுவும் இல்லை.

## மௌல்வி முகம்மது காசிம்:

பண்டிதர் அவர்கள் சொன்ன வழிகளே விடுதலையடைய போதுமானவை என்று எம்மால் கூறமுடியாது. ஏனென்றால், எல்லாம் இறைவன் விருப்பப்படி தான் நடக்கின்றது. எவர்மீது அவனுக்கு விருப்பம் உண்டோ, அவருக்குத்தான் அவன் விடுதலை தருகின்றான். இக்காலத்தில் ஆட்சி செய்கிற அரசர் தம் விருப்பம் போல குடிமக்களைத் தண்டிப்பதோ அல்லது விட்டு விடுவதோ போல. இறைவன் மீது நமக்கு உரிமை இல்லை. அவன் என்ன செய்வான் என்று நமக்குத் தெரியாது. ஆனால், இக்காலத்தில் உலகை ஆளுகின்ற அரசின் சார்பான தூதுவரிடம் நாம் நம்பிக்கை வைக்கவேண்டும்.

இந்தக் கால கட்டத்தின் அரசர், நமது தூதர் (முகம்மது நபி) அவர்களே. எனவே, விடுதலை என்பது முழுமையாக அவர் மீது நம்பிக்கை வைப்பதில் தான் இருக்கிறது. அறிவு மூலமாக ஒருவர் நற்செயல்கள் செய்ய முடியும் என்பதில் ஐயமில்லை. ஆனால், விடுதலை கடவுளிடம் இருப்பதாகும்.

## சுவாமி தயானந்த சரஸ்வதி

(ஸ்காட் பாதிரியாருக்கு விளக்கம்) தீமையை விட்டு விலகுவதால் விடுதலை. துன்பத்திலிருந்து விடுதலை பெறுவது என்று நீங்கள் சொன்னது, என்னுடைய பேச்சைச் சரியாகப் புரிந்து கொள்ளாததால். தீய செயல்களினின்று விலகி, தீமை செய்யாமலிருப்பது முதலியவைகளே வீட்டுப் பேற்றுக்கு முதற்படி என்று நான் ஏற்கெனவே சொல்லிவிட்டேன். தீய செயல்களின் விளைவுதான் துன்பம்-துயர். வேறு சொற்களில் கூறுவதானால் மனிதன் பாவம் செய்கிறான்; எனவே துன்பத்திலிருந்து தப்பிக்க முடியாது. சாதனை எனப்படும் வழிகளையும் நான் தெளிவாகப் பட்டியல் போட்டுச் சொல்லி விட்டேன். நான் சொன்னதை பாதிரியார் அவர்கள் நினைவில் கொண்டிருந்தால், அவ்வாறு பேசியிருக்க மாட்டார்கள். சாத்தானால் தூண்டப்பட்டு ஆதாம் பாவம் செய்தான் என்று இரண்டாவதாகக் கூறினார். அதனால், அவனுடைய வழித்தோன்றல்களான மனிதர்கள் களங்கமுற்றார்கள் என்பது ஆதாரமற்றது. கிறித்தவ நம்பிக்கை படியே, கடவுள் எல்லாம் வல்லவர். ஆனால் சாத்தான் கடவுளால் படைக்கப்பட்ட தூயப் பிறவியான ஆதாமை இழி நிலைக்குக் கொண்டு சென்று, அவ்விதமாகக் கடவுளின் ஆட்சியில் குறுக்கிட்டு, அவரால் ஏற்படுத்தப்பட்ட அமைப்பைத் தலைகீழாக மாற்றிய பொழுது, கடவுளின் எல்லாம் வல்ல தன்மை மறைந்து விட்டது. உண்மை என்னவென்றால், கடவுளின் கட்டளைகள் எவராலும் மீறிக்குறுக்கிடப்பட முடியாதனவாகும். ஆதாம் செய்தத் தீயசெயலால் மனித இனம் முழுவதுமே களங்கப்பட்டு விட்டது என்று சொல்வது, சாதாரண அறிவுக்குப் பொருந்தாது. தீமை செய்கிறவர் எவரோ அவரே துன்பம் அடைவார், வேறு எவரும் அல்லர். இந்தக் கிறித்தவக் கொள்கையை எந்த அறிவாளியும்ஒப்புக்கொள்ள மாட்டார். அன்றியும், ஆதாமும்,

ஏவாளும் மட்டுமே மனித இனத்தின் தந்தை தாயாக இருக்க முடியாது. ஏனென்றால், சகோதரர், சகோதரி விவாகமே பொருந்தாதச் செயல். முதல் படைப்பின் போதே ஆண்களும், பெண்களுமாக பல மனிதர்களைக் கடவுள் படைத்தார் என்பது உறுதி. இதைத்தான் நம்ப வேண்டும்.

இனி, சாத்தான் தூண்டினான் என்று கூறினார். சாத்தான் எல்லோரையும் தூண்டி விடுகிறான் என்றால், சாத்தானைத் தூண்டிவிட்டவர் யார்? அவனுக்குத் தூண்டுதலை அவனே ஏற்படுத்திக் கொண்டான் என்று நீங்கள் சொன்னால், நான் சொல்கிறேன், பிற மனிதர்களைப் பற்றியும் அவ்விதமாகவே, அதே அழுத்தத்தோடு சொல்லலாம் என்று. இத்தகைய நிலையில் சாத்தான் தூண்டியதாக நம்புவது பயனற்றது. வேறு யாராலோ சாத்தான் தூண்டபட்டதாக நீங்கள் சொன்னால், அந்தச் செயலைச் செய்தவர் கடவுளே அன்றி வேறு எவராகவும் இருக்க முடியாது என்று ஆகிவிடும். இது கடவுளின் வேலைதான் என்றாலோ, உங்களுடைய சமயக்கருத்தின்படி விடுதலை அல்லது வீட்டுப்பேற்றை தருபவர் என்றும், பெறுபவர் என்றும் இருக்க முடியாது. ஏனென்றால், கடவுளே தூண்டுபவராக இருக்கையில், காப்பவராக யார் இருக்க முடியும்? இப்படிப்பட்ட நிலை இறைவன் விருப்பத்திற்கு மாறானது. ஏனென்றால், இறைவன் உண்மையும், நேர்மையும் உருவானவன். அவனுடைய செயல்கள் எப்பொழுதும் நேர்மையானதாகவே இருக்கும். அவன் யாரையும் தூண்டிவிடுகிறவனோ அல்லது எவருக்கும் துன்பம் அளிப்பவனோ அல்லன்.

கடவுளுடைய ஆட்சியில் எப்படிப்பட்ட குறும்பு செய்தாலும் கூட, அந்தச் சாத்தானைக் கடவுள் தண்டிக்கவோ, கொல்லவோ, அல்லது சிறையில் தள்ளவோ செய்ததில்லை என்பது கவனிக்கப்பட வேண்டியதாகும். கடவுள் செயலற்றுப் போய்விட்டார் என்று தெளிவாகிறது. கடவுள்தான் தூண்டிவிட்டவர் என்றும் இது காட்டுகிறது. ஆனால், இவையெல்லாம் பொய்யானவை. சாத்தான் என்று ஒருவர் அல்லது ஒரு பொருள் இல்லை. சாத்தானில் நம்பிக்கை என்பதை மனதிலிருந்து வேரோடு நீக்குகின்ற வரையிலும், பாவச் செயல்களிலிருந்து விடுதலை கிடையாது. தாங்கள் பாவிகள் அல்ல என்று நம்பி மனிதர்கள் தம்மைத் தாமே ஏமாற்றிக்

கொண்டிருப்பார்கள். அவர்கள் சொல்லிக்கொள்கிறார்கள்.

"சாத்தான் ஆதாமைத் தூண்டி அவனையும், அவனுடைய வழித்தோன்றல்களையும் பாவத்தில் ஈடுபடச் செய்ததால் கடவுளும் மனித குலத்தை மீட்பதற்காக அவருடைய ஒரே மகனைச் சிலுவையிலறையச் செய்தார். இனி, எதைப் பற்றியும் பயம் இல்லை. நாம் பாவம் செய்தால் கூட, ஏசு கிறித்து மீது நம்பிக்கை வைப்பதால் நம்முடைய பாவங்கள் மன்னிக்கப்படும். ஏனென்றால், நம்முடைய பாவங்களுக்காக அவர் தம்மை தாமே பலி கொடுத்தார், இப்படிப்பட்ட மனிதர்கள் பாபத்திலிருந்து தப்பவே முடியாது.

'கடிகார' உதாரணம் சரியானதே. ஏனென்றால், எல்லோரும் தன்னுரிமையுடைய மனிதர்கள். ஆனால் மனிதர்கள் தீய செயல்களிலிருந்து விலகி நற்செயல்களில் ஈடுபட வேண்டும் எனபது இறைவனின் விருப்பம். தீமைகள்(பாவங்கள்)அற்ற உம்பர் உலகை (மேலுலகம்) அடைவதே வீட்டுப்பேறு. சாத்தானின் தூண்டுதல்களினால் மனிதர்கள் தீமைகளினின்றும் தம்மை விடுவித்துக் கொள்ள முடியாமல் இருக்கிறார்கள் என்றெல்லாம் கூறுவது ஆதாரமற்றது. ஏனெனில், ஒவ்வொரு மனிதனுக்கும் செயலாற்ற தன்னுரிமை உண்டு; சாத்தான் என்பது கற்பனை. பாவத்தின் பிடியிலிருந்து உங்களை விடுவித்துக் கொள்ள உங்களாள் முடியும்; இறைவன் அருளாள் வீட்டுப் பேற்றை அடையவும் முடியும். ஆதாம் கோதுமையைத் தின்றான். அது தான் அவன் செய்த ஒரே ஒரு தவறு. அதன் விளைவாகத் தீமைகளற்ற நல்லுலகினின்றும் வெளியேற்றப்பட்டான். வெறும் கோதுமை உண்பதே ஆதாமைப் (பாவியாக்கி) கெட்டவனாக்கி விட்டது; அவனைத் தீமைகளற்ற நல்லுலகிலிருந்து வெளியேற்றியது என்றால் வீட்டுப் பேற்றை அடைய விரும்புகிறவர்களாகிய நீங்கள் இத்தகையப் பொருட்களை உபயோகிக்காமல் இருப்பீர்களா? இல்லையென்றால், நீங்கள் பாவிகளாகி அதன் விளைவாக தீங்கற்ற நல்லுலகினின்றும் விரட்டப்பட மாட்டீர்களா? எனவே நீங்கள் சொல்வது சரியல்ல.

கடவுள் பற்றிய உங்கள் கருத்தே மானுடமாக உள்ளது. அதாவது, மனிதன் எல்லாமறிந்தவனல்லன்; அது போலக் கடவுளும் எல்லாமறிந்தவர் அல்லர். உங்களுடைய சமய

நம்பிக்கையின் படி, கடவுளிடம் ஏசு சாட்சியம் சொல்வார்; வாதிப்பார்; முறையிடுவார் என்கிறீர்கள். இப்படிப்பட்ட கருத்து, எல்லாம் வல்ல இறைவனில் குறை காண்பதாகும். கடவுள் எல்லாமறிந்தவராதலின், மனிதர்களுக்காக, ஒரு வக்கீல் அல்லது சாட்சியம் அவருடைய நீதிமன்றத்தில் தேவையில்லை. சாட்சியம் யாருடைய நன்மைக்காக? அவரைப் பற்றிக் கடவுளுக்குத் தெரியாது என்ற நிலை இருந்தால்தானே சாட்சியம் தேவை? மேலும், உங்களுடைய கருத்துப்படி, கடவுள் ஒருவரை முக்கியமாகச் சார்ந்து இருக்கிறார். ஏனென்றால், ஏசுவின் சாட்சியமின்றி, எவருக்கும் வீட்டுப் பேற்றை அளிக்க அவரால் முடியாது. அதாவது, அவர் எல்லாம் வல்லவர், எல்லாமறிந்தவர், என அவருடைய பண்புகளை நீங்கள் ஒப்புக் கொண்டு விட்ட பிறகு, அவருடைய அறிவு ஒரு எல்லைக்குட்பட்டது என்பது பொருந்தாது. இதனை நீங்களே ஒப்புக் கொள்வீர்கள். கடவுள் நேர்மையானவர் என்றால், அவருடைய அந்தப் பண்பை விட்டு விட்டு எவருடைய குறுக்கீடு-சாட்சியத்தையும் அவர் ஏற்றுக்கொள்ள முடியாது. அப்படி அவர் செய்தால், அவர் நேர்மையானவரும் அல்ல. அதுபோன்றே, அவரது தெய்வீக அவையில் தேவைதைகள் முதலானோர், மனிதர்களுடைய நீதிமன்றங்களில் இருப்பது போல் இருக்கிறார்கள் என்று நீங்கள் நம்பினால், அவருடைய புனிதத்தன்மையைப் பல விதங்களில் குற்றம் குறைகளுடையதாகச் செய்து விடுகிறீர்கள். ஏனென்றால், அத்தகைய நிலைமையில் கடவுள் எல்லாவற்றிலும் நிறைந்திருப்பவராகவும், எல்லாவற்றையும் தமக்குள் அடக்கியிருப்பவராகவும் இருக்க முடியாது. கடவுள் எங்கும் உள்ளவரல்ல எனிலோ, அவர் உடல் தரித்தவராக, உருவமுடையவராக ஆகின்றார். உருவமுடையவர், உடல்கொண்டவர் என்றாலோ, எல்லாவற்றையும் அடக்கி ஆள்பவராகவும், தமது கட்டுப்பாட்டில் வைத்திருப்பவராகவும் அவர் இருக்க முடியாது.

மேலும், உடல் தரித்தவர் பிறப்பு-இறப்புக்கு ஆளாகின்றார். இது கடவுள் தன்மைக்கு மாறுபட்டது. ஆகையினால் இத்தகை நம்பிக்கை ஒரு பொழுதும் ஏற்கத் தக்கது அன்று என்று தெளிவாகிறது. ஏனெனில், அது அவரை ஒரு எல்லைக்குட்பட்டவராகச் செய்து விடுகிறது.

ஆரிய (இந்து) சாத்திரங்களைச் சரிவரப் படிக்காததா மனிதர்கள் தவறான கருத்துக்கள் கொண்டவர்களா விடுகிறார்கள்.. கலியுகத்தைப் பற்றி பாதிரியார் அவர்கள் கூறிய தகவல் தவறானதாகும். எங்களுக்கு (ஆரியர்/இந்துக்களுக்கு) அக்கருத்தில் நம்பிக்கையில்லை. ஏனென்றால், வேதத்தின் கருத்து, ஐதரேய பிராமணத்தின் படி,

கலிஷ்ஷயானோ பவதி ஸஞ்ஜிஹானஸ்து த்வாபர।
உத்திஷ்டம் ஸ்த்ரேதா பவதி க்ருதம் ஸம்பத்யதே சரன்

-ஐத. பஞ்ஜிகா 7, கண்டிகா 15

அதாவது, எப்பொழுதும் நெறிக்கு முரண்பட்டு, பெயரளவுக்கு நெறியைப் பின்பற்றுபவனாக இருக்கிறவனை, 'கலி' என்றும், பாதி அளவுள்ள நெறிகளைப் புறக்கணித்து மற்றப் பாதிக்கு நெறிகளைப் பின்பற்றுபவனாக உள்ளவனை, 'த்வாபர' என்றும், கால் பங்கு அறங்களைப் புறக்கணித்து, முக்கால் பங்கு அறவழி நிற்பவனை, 'த்ரேதா' என்றும், முழுமையும் அறவழி நிற்போனை, 'சத்ய' என்றும் அழைக்கின்றோம்.

(கலி யுகத்தான் = ஆஷாடபூதி, வேடதாரி; த்வாபர யுகத்தான் = கவனம் இல்லாதவன்; திரேதா யுகத்தான் = போற்றத்தக்கவன்; சத்ய யுகத்தான் = சத்யசந்தன், அறவோன்.
- ஆங்கில மொழி பெயர்ப்பாளர்)

இந்த உண்மையினை அறிந்து கொள்ளாமல் ஏதேதோ பேசுவது சரியல்ல. தீயச் செயல்களில் ஈடுபடுவோர், அவற்றின் துன்பம் நிறைந்த பலன்களிலிருந்து தப்ப முடியாது. நற்செயல்களில் ஈடுபடுவோர், அவர் எந்த நாட்டைச்சேர்ந்தவராயினும், இன்புறுவர்.

ஏசுவின் துணையின்றி இறைவனால் தன் வலிமையால் தன் அன்பர்களைக் காப்பாற்ற முடியாதா? முடியும். ஏனெனில், தூதர்கள் அவருக்குத் தேவையில்லை. அறவழி நிற்கும் சான்றோர்கள், அவர்கள் எந்த நாட்டைச் சேர்ந்தவர்களாயினும், மக்கள் தீமை செய்வதினின்றும் காப்பாற்றுகின்றார்கள். அத்தகைய நாடு, செல்வமும், சிறப்பும், அடைகிறது. இந்த விரும்பத்தக்க விளைவு, சிறப்பாக அறநெறி நின்றொழுகுவதால் உண்டாகிறது. வெறும் சமய நெறிகளால் அல்ல. பண்டைக்

காலத்தில் ஆரியர்களிடையே (இந்துக்களிடையே) சான்றோர்களால் அறி(அற)வுரைகளுக்கான ஏற்பாடுகள் இருந்தன. அதன் பலனாக ஆரியர்களின் (இந்துக்களின்) நிலைமையும் நன்றாக இருந்தது. இப்பொழுது, தக்கவாறு அறிவுரை செய்வோர் இல்லாததாலும், பல வேறு காரணங்களாலும் அவர்கள் சீர்கெட்டுப் போயிருக்கின்றார்கள். என்றாலும், இந்த சீர்கேட்டினால் அவர்களுடைய உயரிய நெறிகளைக் குறைந்து மதிப்பிட முடியாது. படைப்பின் துவக்கத்திலிருந்து ஆரிய (இந்து) நெறி மட்டுமே தன்னுடைய புனிதத் தன்மையைக் காப்பாற்றி வந்துள்ளது - அதனில் தகாதவை பல புகுத்தப் பட்டுள்ளன. கடந்த 1800 ஆண்டுகளில் கிறித்தவர்களாலும் 1300 ஆண்டுகளில் முகம்மதியர்களாலும் நிகழ்ந்துள்ள தீமைகளுடன் ஒப்பிட்டால் - கடந்த 196,09,52,976 ஆண்டுகளில் நமது மக்களிடத்தில் ஏற்பட்டுள்ள தீமை அப்படியொன்றும் பெரிதல்ல.* கிறித்தவர்கள் வளமாக இருப்பதற்கு அடிப்படை அவர்களுடைய சமயம் அல்ல; அவர்களுடைய நல்ல கட்டுப்பாடான ஒழுங்கு முறையுள்ள அமைப்பே 'ஆகும். பிரிட்டிஷ் பாராளுமன்றம் இதற்கு ஒரு எடுத்துக்காட்டு. இந்த ஒழுங்கான அமைப்பு உங்களிடையே (கிறித்தவர்களிடையே) இல்லாவிட்டால், உங்கள் சமயத்தின் வாயிலாக நீங்கள் திடமான முன்னேற்றம் அடைந்திருக்க முடியாது. இங்கிலாந்தில் வாழ்ந்த ஒரு தீயவரின் எடுத்துக்காட்டினை பாதிரியார் அவர்கள் சொல்லி அவர் என்னைப் போல (உடலுறுதியுள்ளவராக) இருந்ததாக ஒப்பிட்டுச் சொன்னார். இது பாதிரியாரின் உயர் நிலைக்குப் பொருந்துவதல்ல. உள்நோக்கம் எதுவுமின்றி அவர் அப்படிச் சொன்னாரென்றே நான் கருதுகின்றேன்.

(மௌல்வியாருக்கு விளக்கம்) கடவுள் தம் விருப்பம் போல் செய்கிறார் என்று, வீட்டுப்பேற்றைப் பற்றி மௌல்வியார் சொன்னார்கள். இது அறிவுக்குப் பொருந்தாது. ஏனெனில், கடவுள் அறிவே வடிவானவர்; (நீதி) நெறி வழங்குபவர்; அவர் எவருக்கும் வேண்டுதல் வேண்டாமையற்ற நடுநிலையாளர். மேலும், மௌல்வியாரின் கூற்று, கடவுள் தாம் தீங்கு செய்கிறவர்

---

* ஆங்கில மொழி பெயர்ப்பாளர் குறிப்பு பிற்சேர்க்கை - 1 காண்க.

என்றும், உலகின் உள்ள தீமை, கடவுள் விருப்பத்தின் விளைவு என்றும் உணர்த்துகின்றது. இது உண்மையாக இருக்கமுடியாது. வீட்டுப் பேற்றை பெறுவதற்கான நற்செயல்களைச் செய்கிறவர் எவராக இருப்பினும், அவ்ருக்குத் தான் அது கிட்டுகிறது.

அத்தகைய நற்செயல்களைச் செய்யாதவருக்கு அல்ல. ஏனெனில், கடவுள் ஒரு பொழுதும் (நீதி) நெறி மாறுவதில்லை. மனிதர்களுக்கு இன்ப நிலை அளிப்பதும் அல்லது துன்பமும், வேதனையும் தருவதும், அவர் மனம் போன போக்கில் தான் என்றால், கடவுளுடைய அத்தகைய நடத்தையினால், அவர் (நீதி) நெறி தவறியவர், நடுநிலை தவறியவர் என்று குற்றச்சாட்டு உண்டாகும். உண்மையில் இறைவன் அவ்வாறு செயலாற்றுவதில்லை. தன்னுடைய இயல்புக்கு மாறாக நெருப்பு சுடாமலிருக்க முடியாதது போல, இறைவனும் தன்னுடைய இயல்புக்கு, அதாவது உலக முழுவதற்கும் நேர்மையானவர் என்ற நிலைக்கு மாறாகச் செல்ல முடியாது. மிக மிகக் குறைந்த அளவில் கூட நேர்மைக்குப் புறம்பான ஒன்றை அவர் ஒருக்காலும் செய்வதில்லை.

எல்லா நேரத்திலும், வீட்டுப் பேற்றை அளிப்பவர், உலகின் தலைவரான கடவுள் ஒருவர் மட்டுமே. வேறு எவரும் அல்ல. வீட்டுப் பேற்றை அளிப்பவராக வேறு எவரையேனும் குறிப்பிடுவோர் தவறான கருத்துடையவர் ஆவர்.

ஒரு தனி மனிதர் மீது வெறும் நம்பிக்கை வைப்பதால் மட்டுமே(முக்தி நிலை) வீட்டுப்பேறு அடைதல் முடிவதன்று. வெளியிலிருந்து ஒருவர் குறுக்கிட்டு சாட்சியம் சொல்வதாலேயே வீட்டுப்பேறு கிட்டுமெனில் கடவுளுக்கு அதனை அளிப்பதாகிய ஆற்றல் உண்மையில் இல்லையென்று ஆகிவிடுகிறது. வேறு சொற்களில் கூறுவதானால், கடவுள் தன்னுரிமையுடையவர் அல்ல. அப்படிப் பட்டவர் கடவுளாக இருக்க முடியாது. உண்மைக் கடவுளுக்கு எவருடைய சாட்சியமும் தேவையில்லை. அவர் எல்லாம் வல்லவர். எல்லா அறிஞர்களும் அவரைப் பற்றி இத்தகைய கருத்து உடையவர்களாக இருக்கிறார்கள் என்று நான் நம்புகிறேன். தாம் முன்பே ஏற்றுக்கொண்டுள்ள கருத்துகளின்படி, சில அறிஞர்கள் இதனை ஏற்றுக்கொள்ள வில்லையெனில் அதுவேறு. தனக்கு இணையாக ஒருவரும்

இல்லாதவன் என்றுஇறைவனைப் பற்றிய நம்பிக்கை உள்ளவர்களாகிய நீங்களே தூதர்களை அவனோடு இணைத்துவிட்டு, எவர் விடுதலை அடைய வேண்டும், எவருக்கு அது கிடையாது என்பதைத் தீர்மானிக்க அவர்களுடைய கருத்துக்கள் இன்றியமையாதன என்று சொல்வது விந்தையாக இருக்கிறது.

உண்மை இதுவே: அறவழி நிற்போர் நற்செயல்களில் ஈடுபட்டு அவற்றை நிறைவேற்றுவதால் இறைவன் அவர்களுக்கு வீட்டு பேறு எனும் விடுதலை அளிக்கின்றார். இதைப் பொருத்தவரை எவருடைய உதவியும் அவருக்குத் தேவையில்லை. பிறரின் உதவி மனிதனுக்குத்தான் தேவை. கடவுளுக்கு எவருடைய உதவியும் தேவையில்லை. அவர் மனம் போனபோக்கில் நடப்பவரும் அல்லர். அவர் அப்படித் தம் விருப்பம் போல செயலாற்றுகிறவர் என்றால், அவர் (நீதி) நெறி தவறியவராகின்றார். உண்மையில் அவர் தம் இயல்பை விட்டு மாறாதவர். அவர் தம்முடைய உண்மையான, அறவழி நிற்கும் அன்பர்களுக்கு விடுதலை தந்து, அவர்களை எப்போழுதும் மகிழ்ச்சியாக இருக்கச் செய்கின்றார்.

மாலை மணி நான்கு ஆயிற்று. சுவாமிகள் தாம் இன்னும் பலவற்றை கூறவேண்டியுள்ளது என்றார். முசுலீம்கள் தொழுகைக்கு நேரமாயிற்று என்றனர். ஸ்காட் பாதிரியார் சுவாமிகளுடன் தனிமையில் உரையாட விருப்பம் தெரிவித்தார். எனவே, இருவரும் அதற்காக வேறிடம் சென்றனர். அவர்கள் இருவரும் சென்ற பிறகு, மௌல்விகளுள் ஒருவர் மேடை மீதேறி தம் சமயத்தைப் பற்றி வெறித்தனமாகப் பேசத்* துவங்கினார். அவருக்குச் சற்று தொலைவில் பாதிரிகள் தம்முடைய கொள்கைகள் பற்றி பேசலாயினார்.

பட்டி மன்றம் முடிவடைந்துவிட்டது என்று சிலர் தெரிவிக்க, இதனைச் செவியுற்ற சுவாமிகள், மௌல்விகள் தொழுகையிலிருந்து திரும்பி வந்து விட்டார்களா என்று பாதிரியார்களையும், ஆரியர்களையும் (இந்துக்களையும்) கேட்டார். பட்டி மன்றம் முடிவுற்றதாகப் பதில் வந்தது. தொடர்புடையவர்களின் ஒப்புதல் இன்றியும், விவாதத்தைத் தொடரலாமா வேண்டாமா என்று கலந்து கொண்டவர்களிடம்

கலந்தாலோசிக்காமலும் இப்படி யார் முடிவு செய்து அறிவித்தார்கள் என்று சுவாமிகள் வினவினார். குழப்பமும் கூச்சலும் அதிகமாக இருந்தது. மேலும் விவாதம் நடைபெற வாய்ப்பில்லை என்பதால், சில அன்பர்கள் பட்டி மன்றம் முடிவுற்றது என்றும், சுவாமிகள் ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டும் என்றும் வேண்டினார்கள். குறைந்தது ஐந்து நாளாவது பட்டி மன்றம் நடைபெற வேண்டுமென சுவாமிகள் விருப்பம் தெரிவித்தார். தம்மால் இரண்டு நாட்களுக்கு மேல் இருக்க முடியாது என்றார் ஸ்காட் பாதிரியாரவர்கள். எனவே, சுவாமிகள் தம் இருப்பிடத்தை அடைந்து "அறத்தின் கோட்பாடுகள்" பற்றி விளக்கம் தர ஆரம்பித்தார்.

அன்றே ஸ்காட் பாதிரியாரவர்கள், தம் துணைவர்கள் இருவருடன் சுவாமிகள் தங்கியுருந்த இடத்திற்கு வருகை தந்தார். மறுபிறப்பு என்கிற கொள்கை உண்மைதானா என்று அவர் வினவியதும், சுவாமிகள் ஆமென்று பதில் தந்தார். சுவாமிகள் மேலும் சொன்னார்: மறுபிறவி மனிதனின் வினைக்கு (செயலுக்குத்) தக்கவாறு அமைகிறது. நற்செயல்கள் புரிவோர் மனிதப்பிறவி எடுக்கின்றனர். தீய செயலில் ஈடுபடுவோர், பறவைகள், விலங்குகள் முதலிய உடல்களைப் பெறுகின்றனர். மிக மிக உயர்ந்த நல்வினைகள், மேலான செயல்கள் செய்தவர்கள் தேவர்களாகவும் ஞானிகளாகவும் முனிவர்களாகவும் பிறக்கின்றனர். இந்தக் கொள்கையின் உண்மையினை விளக்குவதற்கு, எடுத்துக்காட்டாக சுவாமிகள் கூறியதாவது: பிறந்தவுடனேயே குழந்தை தாயின் மார்பகம் பற்றிப் பாலருந்தத் துவங்குகிறது. முற்பிறவியின் (துய்த்தல்) பழக்கங்களினால்தான் குழந்தை அவ்வாறு செய்யத் தூண்டப்படுகிறது. மேலும் செல்வம், இன்பம் எனுமிவற்றில் காணப்படுகிற கூடுதல், குறைதல் முதலான வேறுபாடுகள் மக்கள் கூட்டங்களில் உள்ள வேறுபாடுகள் இவ்வியாவும் வினையின் விளைவுகளே. செயல்கள்தாம், பிறப்புக்களை (உடல்களை) முடிவுசெய்கின்றன. ஆன்மாக்கள் எண்ணற்றவை, அவற்றிற்கு முதலும், முடிவும் இல்லை. முந்தைய பிறவியின் (பண்பாடு) பழக்க வழக்கங்கள் அல்லது படிமம், ஆன்மீக உடலுடன் இணைந்து இருக்கிறது. மனிதர்களிடையில் பல வேறுவிதமான பண்புகள், தன்மைகள் அமையப் பெற்றிருப்பது இதனால்தான்.

இதுபோல், முற்பிறவி-மறுபிறவி எனப்படும் இந்தக் கொள்கையின் உண்மையை மெய்ப்பிக்க மேலும் பல சான்றுகள் உள்ளன. ஆனால், ஆன்மாவும் ஒரு படைப்புதான்; அதுவும் கடைசியில் மறைந்துவிடும் என்று கருத்துக்கு ஆதாரம் இல்லை. இறப்புக்குப் பிறகு ஆத்மா தூங்குகிறது என்பதும்; கடைசித் தீர்ப்பு நாள் என்பதும் உண்மை அல்ல என்றார் சுவாமிகள்.

உரையாடலுக்கு பின் பாதிரியார்கள் விடைபெற்றுச் சென்றனர்.

ஷாஜஹான்பூர் சென்ற பின்னர் மௌல்வியர் விவாதத்திற்கு அங்கு வருமாறு பண்டித முன்ஷி இந்திர மணி அவர்களுக்கு கடிதம் மூலம் அழைப்பு விடுத்தனர். ஆனால் சுவாமிகளும், முன்ஷி அவர்களும் அங்கு சென்ற பொழுது எவரும் வாத விவாதம் செய்யப் பட்டிமன்றம் அமைக்க முன்வரவில்லை.

(* ஆங்கில மொழிபெயர்ப்பாளர்கள் குறிப்பு: பிற்சேர்க்கை எண் 2 பார்க்க.)

## பிற்சேர்க்கை எண் : 1

"ஸ்பெயின் நாட்டில் தோர்க்கி மாடா என்பவர் (கிறித்துவ சமயத் தலைவர்) ஹிப்ரு மொழியில் (இன்றைய இஸ்ரேலின் அரசு மொழி-யூத மக்களின் தாய்மொழி) உள்ள நூல்களைக் கிடைத்த இடங்களில் எல்லாம் எரித்து அழித்தார். சலமான்கா எனுமிடத்தில் மட்டும், 6000 கீழ்நாட்டு மொழி நூல்கள் (யூத, அரபிய) தீக்கிரையாயின. 119 அறிஞர்கள் சமயக் கொள்கைக்கு எதிரானவற்றை கற்பித்ததற்காக அல்ல, அறிவியலைக் கற்பித்ததற்காக பாதாளச் சிறையில் தள்ளப்பட்டனர். இது ஸ்பெயின் நாட்டில் இன்க்விசிஷன் என்ற பெயரால் நடைபெற்ற சமய விசாரணைக் கொடுமையின் போது நிகழ்ந்தது. பிரான்சு நாட்டில் ஹ்யூஜி நாட்டுகள் எனப்படும் கிறித்தவ ஆதிக்கவாதிகள் ஆட்சிக்கு வந்து கிரேக்க மொழி, வேதியியல் கற்பதைத் தடை செய்தனர். அதே நாட்டில், ரோமன் கத்தோலிக்க கிறித்தவ சமயத்தார் எந்தவிதமான அறிவியல் நூலும் கற்பிக்கப்படக் கூடாது என அவை எல்லாவற்றையும் விலக்கிவிட்டனர்" (அன்னி பெசண்ட் அம்மையார்)

முகம்மதியர்கள் தாங்கள் சென்ற விடங்களில் எல்லாம் எல்லாவிதமான நூல்களையும் எரித்தனர். கி.பி. 1303-ல் வங்காளத்தின் மீது படையெடுத்துச் செல்லும் வழியில், பாட்னா நகரில் இருந்த மிகப் பெரிய நூலகத்தை, பக்தியார்கில்ஜி என்ற முஸ்லிம் படைத் தலைவன் தீக்கிரையாக்கினான். வேதம் என்று கேட்டாலே, முகம்மதியர்கள் வியப்படைகின்றனர். ஏனென்றால், அவர்களுடைய செல்வாக்கு மேலோங்கி இருந்தபொழுது, வேதங்களையும், பிற எல்லாச் சமய நூல்களையும் எரித்து விட்டதாக அவர்கள் நம்புகிறார்கள். கலிபா உமர் என்பவரின் கட்டளைப்படி, அலெக்ஸாண்டிரியா நகரில் (எகிப்து நாட்டில் உள்ளது) இருந்த உலகப் புகழ்பெற்ற நூலகம் தீயிடப்பட்டு மாதக்கணக்காக எகிப்து நாட்டில் முசுலிம்களின் குளியலறைகளில் வெந்நீர் போடுவதற்கு பயன்படுத்தப்பட்டது.

## பிற்சேர்க்கை எண்:2

முதலில் திட்டமிட்டபடி பட்டிமன்ற நிகழ்ச்சிகள் நடைபெறவில்லை. ஏனெனில், அந்த இடத்தில் தங்கியிருந்து விவாதிக்க கிறித்தவ, முகம்மதிய சமயத்தலைவர்கள் முன்வரவில்லை. சமயக் கொள்கைகளைப் பற்றிய உண்மைகளை ஆராய்கின்ற இத்தகைய பொது பட்டிமன்றங்கள் இந்திய நாட்டில் பொது மக்கள் கவனத்தை மிகவும் ஈர்ப்பனவாகும். உலகம் முழுவதும் உள்ள இந்து, கிறித்தவ, முகம்மதிய சமயத் தலைவர்கள், குருமார்கள் தம்மைப் பின்பற்றுவோரால் ஆதரிக்கப்பட்டு செல்வந்தர்களாக இருக்கின்றவர்கள். சமய சார்பைவிட உலகியல் அல்லது பொருளாதாரச் சார்பே அவர்களுக்கு மேலானது என்பதால், இத்தகைய பட்டிமன்றங்களில் ஈடுபாடற்றவர்களாக உள்ளனர். சுவாமிகள் தம் ஏமாற்றத்தை வருத்தத்தின் மூலம் வெளிப்படுத்தினார். என்ன பயன்? பாதிரியாரும் விவாதம் செய்வதற்காகத் தங்கியிருக்க முன்வரவில்லை. மௌல்வியர் ஷாஜஹான்பூரில் பட்டிமன்றம் நடத்துவோம் என்று கூறிச் சென்றாலும், சுவாமிகள் அந்த ஊரை அடைந்த பொழுது பேசுவதற்கு யாரும் வரவில்லை.

இந்த சாந்தாபூர் சமய விவாதம், கற்றறிந்த இந்தியர்களுக்கு மெதுவாகவும் ஆனால் திடமாகவும்,

புரியச்செய்தது இதுதான்: வேத நெறிகளுடன் ஒப்பிட்டால் கிறித்தவமும், முகம்மதிய மதமும் நிலை நிற்கா; வேத சமயம் அவற்றைவிட மிக உயர்ந்தது; அதனில் உண்மை இருக்கிறது. உண்மையைத்தவிர, முழு உண்மையைத்தவிர வேறு எதுவும் அதனில் இல்லை.

வாழ்க வையகம்!

வாழ்க வளமுடன்!

ஓம்

# ரிஷி தயானந்தர்

கிபி. 1824-ல் இன்றைய குஜராத் மாநிலத்தில் உள்ள மோர்வி-டங்காரா கிராமத்தில் கர்ஸன்ஜி திவாரி எனும் அந்தண நிலக்கிழாரின் அருமை மகனாகப் பிறந்து, மூலசங்கரர் எனப்பெயர் சூட்டப்பட்டுத் தீவிர சைவராக வளர்க்கப்பட்டவரே பின்னாளில் ஆரிய சமாஜ நிறுவனர் சுவாமி தயானந்த சரசுவதி என அழியாப்புகழ் பெற்றார் என்பது வரலாறு கூறும் உண்மை. ஒரு சிவராத்திரி நாளன்று, உருவ வழிபாட்டில் நம்பிக்கை இழந்து, உண்மையான அறிவை நாடி, சிறுவயதிலேயே துறவுபூண்டு, வீட்டைவிட்டு வெளியேறினார். வடமதுரையில் சுவாமி விரஜானந்தரிடம் பயின்று தம் ஐயங்கள் அனைத்தும் நீங்கப்பெற்றார். குருவின் கட்டளைப்படி உண்மை இந்து சமயமாகிய வேத நெறியினைப் பரவச் செய்ய நாடு நகரமெல்லாம் அலைந்து, பல இடுக்கண்களையும் கடந்து, எதிர்ப்புகளைச் சந்தித்து, வேதவிளம்பரம் செய்தார். பலமுறை அவருடைய உயிருக்கு ஆபத்து நேரிட்டதெனினும், கலங்காமல் சூறாவளி போலத் தம்முடைய கொள்கைகளைப் பரப்பி வந்தார். 1875-ல் ஆரிய சமாஜத்தை அமைத்து, மீண்டும் இந்துக்களை வேத வழிக்குக் கொண்டுவரும் அரும் பெரும் பொறுப்பினை அதற்கு அளித்தார். 1883-ல் அவர் காலமாகும் வரை இந்துக்களை இன-சமய-பழக்க வழக்கங்கள் எனும் விலங்குகளிலிருந்தும், மூடநம்பிக்கைகளிலிருந்தும் விடுவித்து, அவர்களை ஒரே சமயத்தவராக, கூட்டத்தவராக ஆக்க முயன்று பாடுபட்டார்.

ஓம்

## ஆரிய சமாஜத்தின் பத்துக் கொள்கைகள்

1. இறைவனே எல்லா மெய்யறிவுக்கும், அவ்வறிவால் அறியப்படும் எல்லாவற்றிக்கும் அடிப்படை ஆதாரம்

2. கடவுள், உண்மை-அறிவு-இன்பவடிவினர், உருவமற்றவர், பேராற்றலுடையவர், நீதிவள்ளல், அருளாளர், பிறவாதவர், எல்லையற்றவர், மாறாதவர், தோற்ற(துவக்க)மற்றவர், இணையற்றவர், அனைவருக்கும் (அனைத்துக்கும்) தலைவர், எங்கும் நிறைந்தவர், எல்லாம் அறிபவர், மூப்பற்றவர், அறிவே வடிவானவர், அச்சமற்றவர், என்றுமுள்ளவர், தூயவர், அனைத்து உலகுக்கும் ஆதாரமானவர். அவரையே வணங்குவோம்.

3. வேதங்கள் அறிவு நூல்கள். அவற்றைப் படிப்பதும், படிக்கக் கேட்பதும், கற்பதும், கற்பிப்பதும், பிறருக்கு விளக்குவதும் ஒவ்வொரு ஆரியனின் தலையாய கடமையாகும்.

4. உண்மையை எற்கவும், பொய்யை புறத்தே ஒதுக்கவும் ஒருவர் எப்போதும் ஆயத்தமாக இருக்க வேண்டும்.

5. எச்செயலையும் அறத்துக்கு இசைந்ததாகவே செய்ய வேண்டும். அதாவது நன்மை தீமைகளை நன்கு ஆராய்ந்தே செய்ய வேண்டும்.

6. மனிதர்களின் உடல்நலம், ஆன்மநலம், சமுதாயநலம் இவற்றை மேம்படுத்தி உலகுக்கு நன்மை செய்வதே, ஆரிய சமாஜத்தின் தலையாய நோக்கம்.

7. அனைவரிடமும் அன்புடனும், நீதி உணர்வுடனும், தக்க மரியாதையுடனும் நடந்து கொள்ள வேண்டும்.

8. அறியாமை அழிக்கப்பட வேண்டும்; அறிவு பரப்பப்பட வேண்டும்.

9. தனது மேன்மையில் யாரும் நிறைவடைந்துவிடக் கூடாது, மற்றவர் மேன்மையில் தனது மேன்மையும் கலந்திருப்பதை உணர வேண்டும்.

10. சமுதாய நன்மைக்காக சட்டங்களை ஒப்புக் கொண்டு அவற்றுக்குட்பட்டு நடக்க வேண்டும். ஆனால், பொது நலத்தைப் பாதிக்காதவாறு, ஒவ்வொருவரும் தத்தமது செயல்களில்/நடத்தையில் தன்னுரிமையுடன் நடந்து கொள்ளலாம்.



கிறித்தவ முசுலீம்களோடு சுவாமி தயானந்தர்
மெய் நெறிச் சிந்தனை நடத்தும் தோற்றம்
(சாந்தாபூர் மேளா)

**விலை :**